# போகர் கற்பம் 300




பதிப்பாசிரியர்

## சி.எஸ். முருகேசன்







அழகு பதிப்பகம்

20, டீச்சர்ஸ் கில்டு காலனி, 2வது தெரு,
இராஜாஜி நகர் விரிவு, வில்லிவாக்கம்,
சென்னை - 600 049.
தொலைபேசி எண் 26502086- 9444191256.

**Title** : **Boogar Karpam 300**

**Author** : **C.S. Murugesan**



**Price** : **30.00**

**Pages** : **96**

**Print** : **2006**

Lasar Print : **Gemini Digital Designer**
Annanagar, Chennai-40
Ph: 30522 831

Printer : Chennai Art Printers
Chennai-21.

43-2

# அறிமுகவுரை

சித்தர்கள் அழியாத உடம்பைப் பெற்றவர்கள், இரும்பைத் தங்கமாக்கும் இரசவாதக் கலையை அறிந்தவர்கள், கூடுவிட்டுக் கூடு பாயும் சக்தி பெற்றவர்கள், முக்கால நிகழ்வுகளையும் அறியக் கூடியவர்கள், நீரிலும் நெருப்பிலும் வானத்திலும் நடந்து செல்லும் வல்லமை பெற்றவர்கள், உலகம் முழுவதையும் தன் வசப்படுத்தி நடத்தும் வசித்துவ ஆற்றல் பெற்றவர்கள், இயற்கைக்கு மாறான அற்புதங்களை எல்லாம் செய்ய வல்லவர்கள் என்றெல்லாம் போற்றப்படுகின்றனர்.

இப் பூமண்டலத்தில் பிறப்பெடுத்த மனிதன் இயற்கை நியதியின்படி வயதுக்கேற்ப உடலில் மாற்றங்கள் பெற்று- நரை,திரை, மூப்பு பெற்று- ஒருநாள் இறையடி சேர வேண்டியது இயற்கையின் நியதி, இந்நியதியையும் தாங்கள் அறிந்த கற்பத்தினை உண்பதன் மூலம் நரை, திரை, மூப்பின்றி நீண்டகாலம் வாழும்படி இயற்கையை மாற்றி அற்புதங்களைச் செய்து காட்டியவர்கள் சித்தர்கள். போகர் சீன தேசத்தவர் என்றும், காலங்கியின் சீடர், புலிப்பாணியின் குரு, சித்தர்களில் முதன்மையானவர் என்றும் கூறுவர். போகர் எழுதிய வைத்திய நூல்கள் ஏராளம். போகரின் நூல்கள் யாவுமே அமுதமாகும் என்று காகபுசண்டர் தம் பெருநூல் காவியம் 144வது பாடலில் கூறியுள்ளார். ஏற்கனவே சித்தர்களின் கற்பசூத்திரம் நூலைத் தொகுத்துள்ளோம். அதில் விடுபட்ட போகர் கற்பம் 300 இப்போது தனி நூலாக வெளிவருகிறது.

கற்ப மூலிகைகளை முறைப்படி உண்டால் தேகம் கற்பமாகும். இதற்கு கடுக்காய், மிளகு என்று படிப்படியாக உண்டு கற்பமூலிகைகளைச் சாப்பிட வேண்டும். சித்தர்கள் காட்டியுள்ள மருந்துப் பொருட்களில் கடுக்காய் சிறந்ததொரு இடத்தைப் பெறுகின்றது. மகாவிஷ்ணு தேவர்களுக்கு அமிர்தத்தைப் பகிர்ந்து அளித்தபின் கையை உதறிய போது விழுந்த துளிகளே விதைகளாகி கடுக்காய் மரங்களாகின என்கிறார் போகர்.

"ஆழியான் அமரர்களுக்கு அமுதம் ஈந்தே
உள்ளவே கையதனை உதறும் போதில்
உற்ற துளி மண்ணில் விழ மரமும் ஆச்சே"

என்கிறார்.

கற்பம் சாப்பிடும் போது உடலில் ஏற்படும் மாற்றங்களை போகர் சித்தர் மிக அழகாகவே கூறியுள்ளார். கடுக்காயைப் பார்பது காசியைத் தரிசித்த பலத்துக்கு ஒப்பும் என்கிறார்.

கற்பம் உண்டால் மேனியது கருங்கல்லாகும், கத்தியால் வீசினால் தோலும் உரியாது, சிங்கம்போல் பராக்கிரமம் ஏற்படும், மன்மதன் போல் தேகமாகும், மாசற்று நரை திரைகள் எல்லாம் மாறும். வாசியெல்லாம் இறுகிப்போகும். குத்தினாலும் காயத்தில் தைக்காது, உடல் கருங்கல் போலாகும், உடல் கற்பாந்த காலம் அழியாது, தூக்கம், பசி இருக்காது. சுக்கிலம் கீழோடாது, வேண்டியதோர் பெண்ணோடு மருவலாம் என்று கற்பத்தின் சிறப்பை அடுக்கிக் கொண்டே போகிறார்.

"மாளாதே தினந்தோறுங் கற்பமுண்ணு
மங்கையர்பால் மனஞ்சற்று மருவிடாதே
கேளாதே யாரையுந்தான் வயிரமுண்ணு
கெட்டியா முடலிறுகி நரையோமாறும்
தாளாதே நோய்களெல்லாந் தலைகெட்டோடும்
தங்கம்போல் தேகமெல்லாம் சிவப்பதாகும்
தூளாதே மலைசிதறுங் கையால் குத்தில்
துப்புரவாய் வாசியது சோர்ந்திடாதே"

-போகர் கற்பம் 303.

மேலும் பெண்களது போகம் என்றும் மாயத்தில் சிக்க வேண்டாம். பெண்ணரவு என்னும் போகம் கடித்தால் சித்தி யெல்லாம் விழலாய்ப் போகும் என்கிறார்.

இந்நூலில் மூலிகை உற்பத்தி, சுண்ணம், கஷாயம், கற்பம், தயிலம், குளிகை, கட்டுவகைகள், சுத்தி வகைகள் பற்றி விரிவாகக் கூறியுள்ளார். வைத்திய உலகுக்குக் கிடைத்த அரும்பொக்கிஷம் இந்நூல்.

-சி.எஸ். முருகேசன்.

பரமபதி துணை

போகர் திருவாய் மலர்ந்தருளிய

# போகர் கற்பம் 300

## காப்பு

தானான காயசித்தி சொல்லக்கேளு
சனகாதி நால்வருட பதத்தைப் போற்றி
பானான பாட்டர்திரு மூலனாயன்
பதமெந்தன் சிரசில்வைத்துப் பணிந்துபோற்றி
கானான காலங்கி அய்யர்பதம் போற்றி
கற்பத்தின் வகைகளெல்லாங் கருதித்தின்று
தேனான சித்திபெற்ற படியேசொன்னேன்
சிதைவில்லாக் கற்பமுண்டு யோகம்பாரே. 1

## பத்தியம்

யோகமாம் புளியுப்பு யெண்ணெய்சுண்ணம்
உரிசையா மாங்கிஷங்கள் மச்சமாகா
மோகமா மோரோடு கடுகுஉள்ளி
முதிரான காரமொடு பெருங்காயந்தான்
போகமாய்ப் பெண்ணினுட புணர்ச்சியோடு
பேரான நித்திரையுஞ் சோம்பல்தள்ளி
வாகமாம் வாசித்னை மறிந்துக்கொண்டு
மறவாம லிரவுபகல் மனதுஉன்னே. 2

உன்னியே பாலோடு நெய்யைக்கூட்டு
ஒருசேரை சமைத்துண்டு ஒருபோதய்யா
பன்னியே ராமாறு பாலைக்கொள்ளு
பணியாரஞ் சிறுபயறு பழமுந்தேனாம்
குன்னியே கோரக்கர் கற்பமாகும்
கொடியதான வஸ்துவொடு குக்கிடந்தான்
வென்னியே வெள்ளாடு மரைமானாகும்
விதமான காடைகவு தாரியாமே. 3

ஆமென்ற வாசனையா லுப்புத்தேடில்
அழுத்தமாய்க் கட்டியதோ ருப்புக்கூட்டு
போமென்ற புளிமேலே ஆசையானால்
புளியாரை புளியரணை சீயக்காய்க் கொளுந்து
நேமென்ற நெல்லிக்காய் பசலிக்கீரை
நித்தியமாய்க் கூட்டியே கற்பமுண்ணு
ஆமென்ற பயறோடு இள நீருங்கரும்பும்
ஆகாது குளிர்ந்ததண்ணீர் தானுங்காணே 4

## தாம்பூலச் சுண்ணம்

காணவே தாம்பூலந் தின்பதற்குக்
கற்பூரச் சிலைசுண்ண முத்துச்சுண்ணம்
பாணவே பவளத்தைச் சுண்ணம்பண்ணு
பரிச்சுண்ண மண்டத்தின் சுண்ணமாகும்
தாணவே தலைமுழுக்கு பசுவின் நெய்தான்
தடவியே பசும்பயறு அரப்பாய்ப்பண்ணி
ஊணவே பட்சத்துக் கொருக்கால்தானும்
உத்தமனே முழுகுதற்கு உண்மைகேளே. 5

## முழுக்கு விபரம்

உண்மையாய் மிளகோடு மஞ்சள்நெல்லி
உத்தமமாங் கடுக்காயும் வேப்பம்வித்து
தன்மையாய்ச் சமமாக நிறுத்துக்கொண்டு
தனித்துநின்ற ஆவின்பால் விட்டு ஆட்டி
திண்மையாய் தலைதனிலே தேய்த்துவைத்து
சிறக்கவே ஒருசாம மானபின்பு
வெண்மையாய் வென்னீரில் முழுகிப் போடு
விரைந்ததோர் பட்சத்துக் கொருக்கால்தானே. 6

## வழலை வாங்க

தானான காலையிலே வழலைவாங்க
சாதகமாய்க் கரிசாலைச் சாற்றினோடு

ஆனான ஆவின்நெய் சமன்கலந்து
அங்குஷ்ட விரல்தன்னில் தோய்த்துக்கொண்டு
ஊனான உண்ணாக்கின் மேலேசுத்த
ஓங்கியதோர் சிரசில்நின்ற கபந்தான்வீழும்
கானான சங்கிலிபோல் கபந்தான்வீழ்ந்தால்
காயசித்தி யோகசித்தி கடிசிலாச்சே. 7

கடிசான குஞ்சனத்தில் கருவைக்கேளு
கையான தர்ச்சனையாம் விரல்தன்னுள்ளே
எடிசான யேரண்டத் தெண்ணெய்தோய்த்து
இடசாரி வலசாரி திருப்புநூறு
கடிசான பழமலங்கள் கழன்றுபோகும்
பறவைபோல் காலையுன்னிப் பண்பாய்வாங்கு
நெடிசான வாமமெல்லாங் கழன்றுபோகும்
நிசயோக சித்தியொடு காயசித்தே. 8

## அஞ்சனம்

சித்தாகக் கண்ணுக்கு அஞ்சனத்தைக்கேளு
செங்கடுக்காய் சுட்டகரி விராகனொன்று
துத்தாகத் துருசுதன்னைச் சீலைக்குள்வைத்து
சிதறாமல் சுட்டபின்பு தூளைவாங்கி
வத்தாக விராகனிடை நிருத்திக்கொண்டு
மடையன்தான் விராகனிடை அஞ்சனமப்படியே
குத்தாக வெண்ணெய்யது பலமும்போட்டுக்
கொட்டியே கிண்ணியிலே காவிச்செம்பே. 9

செம்பாலே அரைத்திட்டு வெண்ணெய்போட்டு
திறமாங்கோ ரோசனைதான் விராகனிட்டு
நம்பாலே நால்சாம மரைத்துமைபோல்
நல்மாட்டின் கொம்பென்ற சிமிழில்வாங்கு
அம்பாலே அந்திசந்தி எள்ளுப்போலே
அழகாக கண்ணிலிட ஒளியோமீறும்

உம்பாலே உள்பார்வை ஒளிவுங்காணும்
ஓராண்டு யிப்படித்தான் உகந்துபோடே. 10

## ஆக்கிறாணம்

யோடவே மூக்குக்குப் பொடியைக்கேளு
பெரிதான வறச்சுண்டி வேரைவாங்கி
நீடவே நிழலுலர்த்திப் பொடியாய்ப்பண்ணி
நேரிசையாய் சீலைவடி கட்டிக்கொண்டு
தேடவே குடுக்கைதனி லடைத்துக்கொண்டு
சிறிதாக நுனிவிரலிற் பிடித்துக்கொண்டு
வாடவே வாசியோ டேத்திவாங்கில்
மவுனமாஞ் சிகாரத்தால் ரேசிப்பாயே. 11

ரேசித்தால் நிராதாரத் தடைப்புநீங்கி
நிற்மலமாம் ஆதித்தன் ஒளியோமீறும்
தூசித்தால் சுழிமுனைதான் நெட்டிட்டேறும்
தூசான அழுக்கெல்லாஞ் சிந்திவீழும்
காசித்த கபாலமது கெட்டியாகும்
கண்ணொளிதான் கேசரத்தில் நின்றுபார்க்கில்
ஆசித்த அடுக்காறும் உருவிக்காணும்
அந்தரத்தி னொளியெல்லாம் அருகுமாமே. 12

## வயசுக்குத் தக்கபடி

ஆமென்ற வயசங்கே யிருபதாகில்
ஆச்சரியங் கடுக்காயை யிருபதுநாள்கொள்
மூமென்ற வயதங்கே முப்பதாகில்
முயற்சியா லிருபத்தி ஐந்து நாட்கொள்
நாமென்ற வயதங்கே நாற்பதாகில்
நலமாக முப்பது நாள் கடுக்காய் கொள்ளு
தேமென்ற வயதங்கே ஐம்பதனால்
திறமாக முப்பத்து ஐந்துநாளே. 13

நாளான வயதங்கே அறுபதாகில்
நாற்பதுநாள் கடுக்காயை உண்டுவா நீ

ஏழான வயதங்கே யெழுபதாகில்
ஏத்தமாய் நாற்பத்து ஐந்து நாட்கொள்
தாளான வயதங்கே எண்பதாகில்
சதிராக அன்பதுனாள் கடுக்காய்கொள்ளு
தேளான யெண்பதின்மேல் சித்தியில்லை
திரமறிந்து யிப்படியே கற்பங்கொள்ளே. 14

## கடுக்கா யுற்பத்தி

கொள்ளவே கடுக்காயி னுற்பத்திகேளு
கூராத விஸ்சய னுரோ கணியுமாகும்
புள்ளவே பிருதிவியும் அமுர்தை சிவந்தி
பேரான திருவிரந்தை அபயன்தானாம்
அள்ளவே அமுர்தந்தான் கடைந்தபின்பு
ஆழியா னமரர்களுக் கமுர்தமீய்ந்து
உள்ளவே கைதனையே உதறும்போது
உற்றதுளி மண்ணில்விழ மரமுமாச்சே. 15

மரமாகி யேழுவகைப் பேதமாச்சு
மகத்தான விசையனென்ற கடுக்காய்சூரணித்து
அரமாகி வெருகடிதான் அமுரிதன்னில்
அளாவியே கொண்டாக்கால் வாதம் போகும்
புரமாகிக் பேய்ச்சுரக்காய் போன்றிருக்கும்.
பெரிதான வாதமகா சித்தியாகும்
நரமாகி நாற்பதுனாள் கொண்டிட்டாக்கால்
நாதமாம் வாதமது நலங்கிப்போமே. 16

போமென்ற ரோகணியின் பிறவிகேளும்
பெரிதாகு மொன்றினால் கீத்துமாகும்
காமென்ற காய்துவராங் கணக்கைப்பார்த்து
கலந்திடித்துச் சூரணமாய்ச் செய்துகொண்டு
ஆமென்ற அமுரிதனில் குழப்பிக்கொண்டு
அதிகமாஞ் சீதமறும் கிறுமினாசம்
வாமென்ற மண்டலந்தான் கொண்டால் கேளு
வன்னியே மிகத்துலங்கி மருவும்பாரே. 17

மருவியே பிருதிவியின் குணத்தைக்கேளு
மருவுகின்ற மேல்தொலிதான் சிறுத்துக்காணும்
தருவவே சதைதானும் பருத்திருக்கும்
தனித்திட்ட கடுக்காயைச் சூரணித்து
அருவவே அமுரியினால் கலக்கிகொள்ளு
ஆமமெல்லாங் கழன்றுபோங் கிருமிவீழும்
நருவவே னாற்பதுனாள் கொண்டாயானால்
நாடிசுத்தி தேகசுத்தி யாகும்நாடே 18

நாடவே அமிர்தையெனுங் கடுக்காய்க்குத்தான்
நலத்தசாதை பெற்றிருக்கும் நிறமுமஞ்சள்
வாடவே காலநோய் தனையகற்றும்
மருவியதை யிடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
ஆடவே அமுரிதனில் கலக்கிக்கொள்ள
அடைவாக மண்டலந்தா னுண்டாயானால்
தாடவே சதையிலுள்ள ரோகமெல்லாம்
சாடுமே சுயம்பாட வாக்குமாமே. 19

வாக்கான சிவந்திக் கடுக்காய்க்குத்தான்
மகத்தான யேமத்தின் வர்ணமாகும்
ஏக்கான திதையிடித்துச் சூரணமே செய்து
ஏத்தமா மமுரிதனை முன்பின்தள்ளி
வாக்கான மண்டலந்தான் கொண்டுவந்தால்
மகத்தா மூலமது வெளியாய்த்தோணும்
நீக்கான வியாதியெல்லாம் நீறாய்ப்போகும்
நிலவரமாய்ச் சடந்தானும் நிற்குந்தானே. 20

நிற்குமே திருவிருதை யெனுங்கடுக்காய்
நிறந்தானும் பஞ்சவர்ண மாயிருக்கும்
தக்குமே யிடித்து நன்றாய்ச் சூரணமே செய்து
தாக்கான சீலைவடி கொண்டுதானும்
நக்குமே மண்டலந்தான் அமுரிதன்னில்
நலமாக வெருகடிதான் கொண்டுவாநீ
தக்குமே சடந்தானும் கற்பாந்தகாலம்
தனித்துநின்ற வாதபித்த சிலேத்மம் போமே. 21

போமேன்ற அபையனாங் கடுக்காய்தானும்
        பெரிதான கருப்புவர்ண மாயிருக்கும்
ஆமென்ற யிதைஇடித்து அரித்துக்கொண்டு
        அமுரிதனில் மண்டலந்தான் கொண்டாயானால்
வேமென்ற மும்மலமுங் களிம்புபோகும்
        விரைந்துநின்ற நாடி யெல்லா முறுக்குமேறும்
ஏமென்ற யென்பதுக்குள் கொள்ளலாகும்
        ஏத்தமாம் அபையனென்ற கடுக்காய்தானே. 22

தானென்ற கருங்கடுக்காய் கையிருக்கில்
        சகலபூ தப்பிரேதஞ் சங்கைசெய்யும்
ஆனென்ற அனேகநாள் சடமிருத்தி
        ஆயுசுதான் மிகவுண்டா யழுந்துந்தேகம்
தேனென்ற சிவன்தானும் நிருத்தஞ்செய்வார்
        சித்தியாய்ச் சாஷ்வதந்தான சிறக்குந்தேகம்
பானென்ற சீலனாய்ப் பத்தியுண்டாய்
        பகர்ந்ததோர் கடுக்காயின் அபையநன்றே. 23

## கடுக்காய் உற்பத்தி

நன்றான விசையனென்ற கடுக்காய்தானும்
        நலமான விந்தியதே சத்துற்பத்தி
கன்றான ரோகிணி யெனுங்கடுக்காய்
        கன்னியா குமரிதனி லுற்பத்தியாகும்
பொன்னான பிருதிவிதான் சௌராஷ்டதேசம்
        பேரான அமுர்தந்தான் காசியாகும்
தின்னான சீவந்தி திருவிரதைரெண்டும்
        செயலான மச்சியதே சந்தானென்றே. 24

என்றான அபையனென்ற கடுக்காய்தானும்
        எழிலான தேசத்தில் அபூர்வமாய்க்கிடைக்கும்
கன்றான கருங்கடுக்காய் தெரிசித்தாக்கால்
        காசிதனைத் தெரிசித்த பலத்துக்கொக்கும்
பன்றான பரிசிக்கில் சிவசிந்தையாகும்
        பண்பான ஆக்கிராணம் பண்ணினாக்கால்

தன்னான சடத்திலுள்ள நோயெல்லாம்போகும்
தாயான மனோன்மணியுந் தயைசெய்வாளே. 25

## கற்பவிதி

தயையான கருங்கடுக்காய் கிடையாவிட்டால்
சமரசமாம் பொற்கடுக்காய் தூளாய்ப்பண்ணி
அயையான ஆனிமுதல் ஆடி ரெண்டும்
அரிதான வெல்லத்தி னுடனேகொள்ளு
பியையான ஆவணியுங் கன்னிதானும்
பெரிதான யிந்துப்பு கால்வாசிகூட்டி
குயையான அமுரிதனில் கலக்கிக்கொண்டால்
கொடியதோரு ஆமமெல்லாங் கழன்றுபோமே. 26

கழன்றுபோம் அற்பிசியுங் கார்த்திகைக்கும்
கலந்துமே சக்கரையி னூடேகொள்ளு
மழன் றுபோம் மார்கழியுந் தைக்கித்தானும்
மாசற்ற சுக்குகிஷா யத்திற்கொள்ளு
தழன்றுபோம் மாசிபங் குனிக்குத்தானுஞ்
சமரசமா யமுரிதனில் கலக்கிக்கொள்ளு
திழன்றுபோஞ் சித்திரைவை காசிக்குந்தான்
சிறுகுறுஞ்சி தேன்தன்னில் திரட்டிஉண்ணு. 27

## செங்கற்றாழை

உண்டுமே கடுக்காயைத் தள்ளிப்பின்பு
உவப்பான சிவப்பாங்கத் தாளைதன்னை
மண்டுமே மண்டலந்தான் கொண்டாயானால்
மகத்தான திரிதோஷஞ் சாடிப்போகும்
பூண்டுமே முன்கொண்ட உப்புயெல்லாம்
முறிந்துமே சடத்தில் நில்லா வெளியிற்போகும்
கண்டுமே சிவப்பான கத்தாழைதன்னை
கருதியே தின்றாக்கால் சாவுபொய்யே. 28

பொய்யாகப் போகாமல் கத்தாழைதன்னை
பொருந்தியே சோறெடுத்துக் கடுக்காய்த்தூளை

கய்யாரக் கலக்கியே தெளிவிறுத்து
கரண்டிக்குள் ரசம்வைத்துச் சுருக்குப்போடு
மெய்யாக ரசம்கட்டி மணியுமாகும்
மிறளாதே காரமிட்டு உருக்கிப்பாரு
துய்யாச்சு சுப்பிரமாய் கண்விட்டாடும்
துணையாக நாலிலொன்று தங்கம்போடே. 29

## நாகக்கட்டு

போடவே நாகமது பலந்தானாலு
பொரிகாரம் பலம்ரெண்டு சாரமொன்று
நாடவே நாகத்தை உருக்கிக்கொண்டு
நற்சிவப்பாங் கத்தாழைச் சாற்றில் சாய்ப்பாய்
மாடவே பொரிகாரம் சாரம்ரெண்டு
வளமாகப் பொடிபண்ணி மேலேதூவு
ஈடவே யிப்படித்தான் யிருபத்தொன்று
எழிலாக சாய்ந்திடவே கட்டிப்போமே. 30

சாய்க்கவே தங்கமது ரவியுமாகும்
தாதுவென்ற அறுபத்து னாலுங்கட்டும்
வாய்க்கவே உபரசங்கள் சத்துமாகும்
மருவி நின்ற நாகமது உருகும்போது
காய்க்கவே கனகமது கால்தான்போடு
கட்டுகின்ற நாகமப்படியேபோடு
தேய்க்கவே தாளகமுங் கெந்தியொடுசிலையும்
சிறப்பான வெங்காரப் பொடியுங்காலே. 31

காலோடு நாலையுந்தான் கத்தாழைநீரில்
கலந்தரைத்து உண்டைபண்ணிக் காயவைத்து
சாலோடு சரக்கெல்லா முருகும்போது
தாக்கிடுவாய் ஒவ்வொன்றா யுண்டைதன்னை
நாலோடு தயிலத்தை உண்டை வாங்கி
நலமான களங்காகும் நூற்றுக்கொன்று

வேலோடு வெள்ளியிலே குடுத்தாயானால்
விரைந்து நின்ற மாத்ததுவு மெட்டதாமே. 32

எட்டாத செங்குமரி கிடையாவிட்டால்
ஏத்தமாம் வரிக்குமரிச் சோறுதானும்
தட்டாத சதுரக்கள்ளிக் காய்தானைந்து
தனித்துரெண்டும் அமுரியிலே கரைத்துக்கொள்ளு
வெட்டாத மண்டலந்தான் விரைந்துகொள்ளு
வியந்துடம்பின் நின்றபுளி வீழ்ந்துபோகும்
கட்டாக முன்சொன்ன கற்பந்தானும்
காலமே கொண்டபின்பு கருதிக்கேளே. 33

## மயக்கம் தியக்கம் மாற கஷாயம்

கருதியே கருவேம்பு முருங்கையீர்க்கு
கற்கண்டு சுக்கோடு நாலுதானும்
அருதியே அரைப்பலந்தா னிருத்துக்கொண்டு
அறிந்துமே ரெண்டீர்க்கும் வறுத்துபோடு
நருதியே ரெண்டையுந்தா னறுக்கிக்கொண்டு
நல்லதண்ணீர் தனில்காய்ச்சி நாலிலொன்றாய்
மருதியே மாலையிலே கொள்ளவேதான்
மயக்கமொடு தியக்கங்கள் மாறிப்போமே. 34

மாறியே கடுக்காயை உண்ணும்போது
மறவாமல் வழலைதனைத் தினமும் வாங்கு
காறியே காயசித்தி யென்பதுக்குள்நன்று
கைகடந்தா லாகாது கடினமெத்த
ஆறியே கடுக்காய்க்கு மலம்போகாட்டால்
அரகரா வாதபித்த தேகமாகும்
தேறியே சிலபேற்கு போகாமற்சிக்கும்
திறமாகக் கழியாட்டால் சித்தியில்லைதானே. 35

## சிவதைச் சூரணம்

தானான சிவதைதனைப் பாலிற்போட்டு
தனித்துமே அடுப்பேத்தி யெரித்துக்கொண்டு

ஊனான துலர்த்தியே யிடித்துநய்ய
உறுசீலை வடிகொண்டு சூரணமே செய்து
கானான கடுக்காய்த்தூள் ரெண்டுபங்கு
கலர்சிவதைச் சூரணந்தான் ஓர்பங்காக்கி
கூனான அமுரியிலே குளப்பிக்கொள்ளு
கூட்டோட ஆமமெல்லாங் கழன்றுபோமே. 36

## மிளகு கற்பம்

போமென்றே யிதைவிட்டு கற்பங்கேளு
புகழாக ஐந்தைந்தாய் மிளகையேற்றி
ஏமென்று யிருபதுநாள் தொண்டுவாநீ
இறக்கியே அமுரியிலே யிருபதுநாள்கொள்ளு
வாமென்ற மாலையிலே அறுகம்வேரு
வண்மையாய் ஒருபலந்தா னிடித்துறய்ய
வேமென்ற மிளகதுதா னிருபத்தைந்து
மிக்கான தண்ணீரில் எட்டிலொன் றாய்க்காய்ச்சி
பாமென்று யிறக்கையிலே பாக்களவுவெண்ணை
பாலித்துப் பாங்காகக் கொண்டிடாயே. 37

## மலங்கழறச் சூரணம்

கொண்டிடுவாய் மண்டலந்தான் குவிந்தபின்பு
குஞ்சரத்து மலத்தையெல்லாம் கழட்டுதற்கு
முண்டிடுவாய் முன்சொன்ன படியேதீரு
முசிந்தபின்பு மிளகுண்ட பின்புகேளு
கண்டிடுவாய் கடுக்காய்தான் பலமும்நாலு
கருதியதோர் திப்பிலியுஞ் சுக்கோடொக்க
ஒண்டிடுவாய் சீரகமும் ஓமம்யிந்து
உருக்கியாம் நருக்கென்ற மூலந்தானே 38

மூலந்தான் வகையொன்று பலந்தான்கூட்டி
முனிந்திடித்துக் கடுக்காயின் விரையைத்தள்ளி

தூலந்தான் சீலைவடி கட்டிக்கொண்டு
துப்புரவாய் வெறுகடிதான் வெந்நீரில்கொள்
ஆலந்தான் அபானமது கீழேனோக்கும்
ஆடையிலும் ஓடையிலும் மூலத்துண்ணு
தாலந்தான் சஞ்சார சமாதியாகும்
தனித்தபின்பு அன்னத்தின் பொடியைக்கேளே. 39

கேளுமே மிளகோடு திப்பிலியுஞ்சுக்கு
கெடியான சீரகமு மதியினுப்பும்
காளுமே கருவேம்பி னிலையினோடு
கலர்சமனாய் வகையொன்று பலந்தானொன்று
தாளுமே பெருங்காயம் பலமுங்கால்தான்
தனித்துமே சூரணித்து வைத்துக்கொண்டு
ஆளுமே அன்னத்தின் நடுவேவைத்து
ஆவின்நெய் விட்டுமே பிடித்துஉண்ணே 40

உண்ணவே அபானமது கீழேநோக்கும்
உத்துப்பார் லெச்சயங்கள் உருவித்தோற்றும்
எண்ணவே கடுக்காயு மிளகுதொட்டு
கைமுறையா யுண்ணயிலே முறிந்தானால்
தண்ணவே சயமெடுக்கும் தங்கக்கற்பம்
தாக்காக வுண்டுடனே தீருந்தீரும்
துண்ணவே உதரத்தில் நோய்கள்வந்தால்
சுகமாக அப்பிரேகக் கற்பங்கொள்ளே. 41

## கற்பம் சாப்பிடுவதால் ஏற்படும் மாறுதல்களுக்குப் பரிகாரம்.

கொள்ளவே மலஜலமுங் கட்டித்தானால்
குறிப்பாக காந்தமென்ற கற்பங்கொள்ளு
அள்ளவே உடம்பசந்து வீங்கிற்றானால்
ஆதியா மிரும்பினுட கற்பங்கொள்ளு
கள்ளவே கண்மயங்கி மறைந்துதானால்,
கலங்காதே கற்பூர சத்தைத்தின்னு

உள்ளவே கடிவிஷம்போ லுடம்பில்வீழ்ந்தால்
உருதியாங் கற்பத்தை உரைக்கக்கேளே. 42

## கற்பமுறிந்தால்

உரைக்கவே வீழிவேர் சூரணித்து
உறுதியாய் சூதகற்பம் வைத்துக்கொண்டால்
பரைக்கவே பதினெட்டுக் குட்டம் போகும்
பாங்கான கல்பத்தால் வந்ததோஷம்
புரைக்கவே போகவொரு கர்ப்பங்கேளு
போக்காக அப்பிரேகச் சத்துதானும்
தரைக்கவே வொருபலத்தில் அரைப்பலமாந்தங்கம்
தாக்கியே ஒன்றாக உருக்கிக்கொள்ளே. 43

உருக்கியே தங்கமிடை செயசூதம்போட்டு
உத்தமமாங் கெந்தகத்தை சுத்திபண்ணி
மருக்கியே யிடைக்கெல்லாஞ் சரியதாக
மாசற்ற கெந்தகத்தை ஓட்டிலிட்டுருக்கி
நருக்கியே மருந்தெல்லாம் பொடியாய்ப்பண்ணி
நலமான தயிலத்தல் பிசறிக்கொண்டு
பெருக்கியே பொடிபண்ணி மேருக்கேற்றி
பெரிதான வாலுகையி லெரித்திடாயே. 44

எரித்திட்டுப் பனிரெண்டு சாமந்தீப்போட்டு
இதமாக ஆறவிட்டு யெடுத்துப்பாரு
அரித்திட்டு அருணநிற மாயிருக்கும்
ஆயிரத்துக் கொன்றிடவே அதிகவேதை
மரித்திட்டே னென்பார்க்கு மார்பிலாணி
வகையாகப் பணவிடைதான் தேனிலுண்ண
உரித்திட்டு உகாந்தவரை யிருக்குந்தேகம்
யோகசித்தி காயசித்தி உறுதியாமே. 45

உறுதியாய்ப் பணவிடைதான் தேனிலுண்ண
உத்தமனே முறிந்தகற்ப முற்றிந்தேறும்

குறுதியாய்க் கற்பத்தால் முறிந்த தோஷம்
கோடிவித மானாலுங் குலாவித்தீரும்
வறுதியாய் வாசனையில் நினைவுவேறாய்
வரிசையா யேறாட்டால் கொழுகிக்கொள்ளும்
நிறுதியாய்ச் செந்தூர முண்டாயானால்
நிற்பிஷந்தான் மருவயிலே நிசமுமாமே. 46

## பத்தியக்குறை விபரம்

நிசமான கற்பங்கள் தின்னும்போது
நீக்கான சடத்துக்கு வருத்தமேது
கசமான கற்பத்தைத் தின்றுகொண்டு
காயத்தில் நோயெல்லாம் தீர்ந்தபின்பு
புசமான பெண்ணோடே புணர்ச்சிசெய்தால்
பேரான சயரோகம் பண்ணும்பாரு
பசமான கற்பமுண்போன் பத்தியத்தை விட்டு
பயறோடு பழவகைகள் தின்றால்கேளே. 47

கேளப்பா நீர்கட்டு மலமுங்கட்டும்
கெடியான தோஷோடு கைகால்சோரும்
தூளப்பா தும்பைச்சார் கொண்டாயானால்
துளித்துமே யிறங்கிரது துறந்துவீழும்
வேளப்பா கற்பமுண்போன் புளிதின்றாக்கால்
மிடுக்கான பெருவயறா யுப்பலாகி
காளப்பா கால்கைக ளதைப்புயேறி
கால்கடுப்பு கைத்திமிரு மாகுந்தானே. 48

தானென்ற கற்பமுண்டோன் கிழங்குதின்றால்
தன்னுடம்பில் சோகையொடு பாண்டுவாகும்
மீனென்ற மாங்கிஷங்கள் மீறித்தின்றால்
மிக்கான மயக்கமொடு சுரமுமாகும்
மோனென்ற தாகத்தில் மோருகொண்டால்
மிகையான குன்மவலி மிடுக்குமாகும்
பானென்று பச்சையுப்பு தின்றானானால்
பட்டுதடா கண்ரெண்டும் பரிந்துகாணே. 49

## சிவகரந்தைக் கற்பம்

காணவே நாறுகின்ற கரந்தைதன்னை
கலங்காமல் சமூலந்தான் பிடுங்கிவந்து
பூணவே நிழலுலர்த்திக் கொண்டுநீதான்
உகந்துமே யிடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
பாயவே பால்நெய்யில் தேனிற்கொள்ளப்
பாங்கான திங்களொன்றில் சடநாற்றம்போம்
வாணவே திங்கள்ரெண்டில் வாதம்போகும்
மருவுகின்ற மூன்றுதிங்கள் பித்தம்போமே. 50

போகுமே நாலுதிங்கள் குஷ்டமெல்லாம்
புகழான ஐந்துதிங்கள் வன்னிமீறும்
நாகுமே ஆறுதிங்கள் ஞானமீறும்
நலமான ஏழுதிங்கள் தேகம்பொன்னாம்
ஏகுமே யெட்டதனிற் சட்டைபோகும்
ஏத்தமாய் ஒன்பதிலே ககனங்கொள்ளும்
பாகுமே பரமசிவன் சடையில்வைத்தார்
பாங்கெல்லாங் கண்டுணர்ந்த படிதானென்றே. 51

என்றான கரந்தையைத்தான் கொண்டுவந்து
யிடித்துபடி சாறுவடி கட்டிக்கொண்டு
கன்றான கரண்டிதனைத் துப்பரவாய்விளக்கி
களிம்பகற்றிச் சூதத்தை அதிலேவிட்டு
தன்றான கரியோட்டில் வைத்துஊதி
சாறுதான் சுருக்கிட்டு நாலுசாமம்
பன்றாகக் கட்டியது வெண்ணெய்யாகும்
பாங்கான வெண்ணெய்யெலாம் வாங்கிக்கொள்ளே. 52

வாங்கியே உண்டைபோல் வைத்துக்கொண்டு
மறுபடியு மிலையரைத்துக் கவசங்கட்டி
தாங்கியே பத்தெருவில் புடத்தைப்போட்டுத்
தப்பாமல் மறுபடியு மிலையரைத்து
தேங்கியே பத்துவிசை புடத்தைப்போடே
திரண்டுமே மணிபோலக் கரியிலாடும்

ஓங்கியே உண்டைதனைக் குகையிலிட்டு
உருகையிலே நாலிலொன்று தங்கம்போடே 53

தங்கத்தி னிடையொக்க நாகம்போடு
தாங்கியே கலந்தொன்றாய் உருக்கிவாங்கி
பங்கத்தின் கல்வத்தி லதனைவிட்டு
பாங்காகப் பொடித்திட்டு பொடிக்குப்பாதி
லிங்கத்தைக் கூட்டியே தாளகமுங்கெந்தி
நேரான சிலையோடு கால்வாசிகூட்டி
அங்கத்தின் கரந்தையென்ற சாறுதன்னால்
அரைத்துமே பொடியாக்கி மேருக்கேற்றே. 54

ஏற்றியே பனிரெண்டு சாமந்தீயை
எளிலான கதிராலே கிண்டிப்பாரு
மாற்றியே மாதளம்பூப் போலேநிற்கும்
மாசற்ற நவலோகம் நூற்றுக்கொன்று
கோற்றியே கொடுத்தாக்கால் கனகமாகும்
கூர்ந்துமே பணவிடைதான் கரந்தையிலேயுண்ணு
தேற்றியே மண்டலந்தா னுண்டாயானால்
சிவந்தெழுந்த சூரியன்போல் முகமாந்தேறே. 55

## வெண்கரந்தை

தேறியே சங்கநிற மாங்கரந்தை
தேடியே பாக்களவு பாலிலுண்ணு
மாறியே மண்டலந்தான் உண்டாயானால்
மாசற்ற சந்திரன்போல் முகமுமாகும்
வீறியே வெள்ளைமயிர் காகமயிராகும்
மேனியுமோ சிக்கென்று சிவந்துமின்னும்
ஊறியே அமுர்தந்தான் யோகத்திற்பார்த்து
உத்தமனே அமுர்தத்தை உண்ணுஉண்ணே. 56

உண்டுமே உமிழ்ந்தாக்கால் கல்லோடுபழுக்கும்
உதந்தகண்கள் செண்பகத்தின் கண்போலாகும்
அண்டுமே வெண்கரந்தை கொண்டுவந்து
அதிகமாம் படிசாறு பிழிந்துவைத்து

தொண்டுமே அயக்கரண்டி கத்திசெய்து
சுத்தித்த சூதத்தை அதிலேவிட்டு
நண்டுமே நால்சாமுஞ் சுறுக்குப்போட
நலமாக வெண்ணெய்யாம் வழித்துவாங்கே. 57

வாங்கியே கிழிபோலே கட்டிக்கொண்டு
மாசற்ற சூடனுட தீயிலிட்டு
ஆங்கமாம் ஆரையிலைக் குள்ளேவாட்டு
அதிகமா மத்தங்காய்க் குள்ளேவாட்டு
மூங்கியே முன்கரத்தை கவசங்கட்டி
மூன்றுபுடம் போட்டெடுத்து உருக்கிப்பாரு
தாங்கியே தங்கம்போ லுருகியாடும்
தகர்த்துடைத்தால் வைரம்போல் தளுக்காம்பாரே. 58

பாரென்ற சூதமணி யெடுத்துப்பார்த்தால்
படிகத்தின் ஒளிபோலப் பத்திப்பாயும்
காரென்று உருக்கினால் கண்விட்டாடும்
கதிர்தெடுத் துடைத்தக்கால் நொறுங்குந்தூளாய்
கூறென்று குகையில்வைத்து உருகும்போது
கொடிதான நவலோகம் நீட்டினாக்கால்
தாரென்று தவளையைப்போல் விழுங்கிப்போடும்
தனித்தபச்சைச் சரக்கூட்டில் தங்கிப்போமே. 59

தங்கிப்போம் பால்மதுதேன் தன்னையுண்ணும்
சாராயந் தனையருந்தும் விஷம்பட்சிக்கும்
மங்கிப்போ மாதருட ருதுபொசிக்கும்
மாசற்ற சூரியன்போல் வர்ணமாகும்
தங்கிப்போம் பூரணதெரி சனமுமாகும்
செபம்பண்ணில் யெழுகோடி மந்திரமுஞ்சித்தி
உங்கிப்போம் சிவவிந்தைக் கட்டினோர்க்கு
ஒருக்காலுஞ் சாவில்லை உண்மைதானே. 60

உண்மையாங் குளிகையைச் செந்தூரம்பண்ணு
உற்பனமாய்க் குருபண்ணு களங்குபண்ணு
வண்மையாய்ச் செந்தூரம் பணவிடை தானிறுத்து
மண்டலந்தான் வெண்கரந்தை தன்னிலுண்ணு

திண்மையாஞ் சிவன்தின்று சடையில் வைத்தார்
சிறப்பாக யான்தின்ற அனுபோகத்தை
எண்மையா யிந்நூலில் எழுதிப்போட்டேன்
எனைப்போலே யாகவென்று யிசைத்திட்டேனே. 61

## கருங்கரந்தை

இசைத்திட்ட கரந்தையைத்தான் கருப்பாய்ப்பண்ணி
இதமாக நிழலுலர்த்தி சூரணமேசெய்து
நசைத்திட்ட நாலிலொன்று கெந்திசூதம்
நாட்டியரை கருப்பான் கரந்தைதன்னால்
புசைத்திட்டுக் கருப்பாகப் பொடியாய்ப்போகும்
போட்டுமே சூரணத்தில் பிசைந்துகொண்டு
திசைத்திட்ட தேனாலே அரைத்துமைப்போல
சிறுகவே உண்டையது கண்டைக்காயே. 62

சுண்டக்கா யளவுமண் டலந்தான்கொள்ள
சோபமில்லை தாபமில்லை மயக்கம்போச்சு
பண்டக்காய் காயத்தில் பதைப்புபோச்சு
பருத்திட்டுக் கண்ரெண்டும் பார்வையாச்சு
உண்டைக்காய் உதரத்தில் கிருமிபோச்சு
உயர்ந்திட்ட வாசனைத்தான் சடத்திலாச்சு
மண்டைக்காய் சிரசுதனில் வருத்தம்போச்சு
மாசற்ற வெண்டதுபோல் சடமுமாச்சே. 63

## கொட்டைக்கரந்தை

ஆச்சுதே கொட்டை யாங் கரந்தைதன்னை
அதிகமாய் சமூலந்தான் பிடுங்கிவந்து
வாச்சுதே நிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
வடிகட்டி நாலிலொன்று கற்கண்டுசேர்த்து
வேச்சுதே வெருகடிதூள் வெந்நீரில் கொள்ள
மிடுக்காகும் கால்கைக்கிப் பெலனுண்டாகும்

ஏச்சுதே வாசியென்ற குதிரைதன்னை
யேத்தியே முளைகட்டி யிருக்குந்தானே. 64

தானான கொட்டையாங் கரந்தைதன்னை
சமூலந்தான் பிடுங்கிவந்து சாறுவாங்கி
ஆனாக அயக்கரண்டி தன்னில்சூதம்
அமுந்தவிட்டு மேலாகச் சுருக்குப்போடு
நானான நால்சாமஞ் சுருக்கிட்டாக்கால்
நல்லவெள்ளிக் கம்பிபோல் ரசமுமாகும்
கானான யிலையரைத்துக் கவசங்கட்டி
காரியமாய் லெகுபுடமாய்ப் போட்டிடாயே. 65

போட்டிடுவாய்ப் புடம்பத்து யிலைக்கவசங்கட்டி
போரான குகையிலிட்டு உருக்கிக்கொண்டு
நாட்டிடுவாய் தங்கமது நாலுக்கொன்று
நாகந்தான் தங்கத்தி னிடையேகூட்டி
காட்டிடுவாய் கல்வத்தில் நொருக்கிக்கொண்டு
கரந்தையென்ற சாற்றாலே அரைத்துமைபோல்
பூட்டிடுவா யுலரவைத்துப் பொடியாய்ப்பண்ணி
பேரிதுக்குச் சரிகெந்தி கூட்டிக்கொள்ளே. 66

கொள்ளவே ஓட்டிலிட்டு கெந்தகத்தையுருக்கி
குறித்தமுன் பொடிபோட்டு வறுத்துப்போடு
கள்ளவே கல்வத்திற் போட்டுக்கொண்டு
காணிக்கி யெட்டிலொன்று தாளாகமுஞ்சிலையும்
வள்ளவே கரந்தை யென்ற சாற்றரைத்து
வாகாக உலரவிட்டுப் பொடியாய்ப்பண்ணி
தெள்ளவே காசியென்ற மேருக்கேற்றிச்
சிலாகையிட்டு சிவந்தபதம் தீயையாத்தே. 67

மாத்தியே மண்டலந்தான் செந்தூரத்தை
மதுதன்னில் குழைத்துபண விடைதானுண்ணு
தேத்தியே சிவந்தகதிர் போலேதேகம்
சிறப்பான லோகத்தில் ஆயிரத்தொன்றிய
பாத்தியே பத்தரையே மாத்துக்காணும்
பதினாறு வயசாகும் பலிப்பாம்பாரு

யேத்தியே வாசியென்ற யோகம் பார்த்தால்
யிருந்திடுமே கற்பாந்த காலத்தானே. 68

## சிகப்பு கொட்டைக்கரந்தை

தானென்ற செங்கரந்தைக் கொட்டை தன்னை
தனிச்சாறு படிரெண்டு அளந்துகொண்டு
நானென்ற நாகமது பலந்தானெட்டு
நவச்சாரம் வெங்காரம் பலந்தானொன்று
ஏனென்ற பொடிபண்ணி வைத்துக்கொண்டு
யேற்றமாம் யிலுப்பைநெய் விட்டுருக்கி
வேனென்ற வெங்காரப் பொடிமேல்தூவி
விரைந்து நின்ற சார்தன்னில் சாய்த்திடாயே. 69

சாய்த்திட்டுப் பதினொருக்கால் பின்பு நீ தான்
தகடுதட்டி லேசாகச் சதுரமாக்கி
காய்த்திட்ட கல்லுப்பு நாகமிடையெடுத்து
கல்லுப்பைச் செங்கரந்தைச் சாறுதன்னால்
ஆத்திட்டு அரைத்துமே தகட்டிலப்பி
அசையாம லகலிலிட்டுப் புடத்தைப்போட
மாய்த்திட்டு ஆறவிட்டு கல்வத்திட்டு
மருவியரைத் தொன்றாக வில்லைகட்டே. 70

கட்டியே ஐம்பதெரு அடுக்கிப்போடு
கனல்குளிர்ந்த பின்புதா னெடுத்துக்கொண்டு
கொட்டியே கல்வத்திற் சாறதனாலரைத்து
கூர்ந்துமே பத்துவிசை போட்டெடுத்து
திட்டியால் பார்த்தாக்கால் சிகப்புமாகும்
சிறந்திதுக்கு நாலிலொன்று சூதங்கட்டி
வெட்டியே வெங்காரப் பொடியோடுசிலையும்
மீறாமல் சூதமிடை கூடப்போடே. 71

போட்டுமே லெகுபுடமாய் ஐந்துபோடு
பேரான வெள்ளியிலே நூற்றுக்கொன்று
நீட்டுமே பத்தரையே மாற்றுக்காணும்
நிலைத்துண்ணு செங்கரந்தை தன்னில்வைத்து

மாட்டுமே மண்டலந்தான் கொண்டாயானால்
வாசியெல்லா முள்ளடங்குஞ் சாவோயில்லை
தூட்டுமே காலாங்கி நாயன்செய்த
சூட்சமாங் கற்பத்தை திறந்திட்டேனே. 72

## விஷ்ணு கரந்தை

திறந்திட்ட விஷ்ணுகரந்தை தனைக்கொணர்ந்து
செப்பமாய் மண்டலந்தான் பாலிலரைத்துண்ணு
மறந்திட்ட நினைவெல்லாம் மருவியுண்ணும்
மாசற்ற யெலும்புக்குள் கரந்தான் போகும்
கறந்திட்ட தேகமது கருத்துமின்னும்
கண்ணொளிதான் யோசனைதூ ரந்தான்காணும்
பிறந்திட்ட சுவாசமெல்லா மிறுகியேறும்
ஏற்றமாஞ் சுழிமுனையுந் திறந்துபோமே. 73

## வெள்ளை விஷ்ணு கரந்தை

போமென்ற வெள்ளைவிஷ்ணு கரந்தைதன்னை
பிடுங்கிவந்து நிழலுலர்த்தா யுணர்த்திக்கொண்டு
ஏமென்று யிடித்துச் சூரணமேசெய்து
எழிலாக மண்டலந்தான் தேனிலுண்டு
சாமென்ற சாவுபொய்யாஞ் சதுர்முகவன் படைப்பு
தப்பியே சதாகோடி தரித்திருக்கும்
காமென்ற கருவூரார் கொண்டகற்பம்
காரணமா மடியார்க்குக் கருதினாரே. 74

கருதியே வெள்ளைவிஷ்ணு கரந்தை தன்னை
கனமாகப் பிடுங்கிவந்து வைத்துக்கொண்டு
அருதியே அயச்சட்டி அடுப்பிலேற்றி
அதிகமாய்க் காரீயந் தன்னைவைத்து
மருதியே உருகவிட்டு வாங்கிக்கொண்டு
வருத்திடுவா யிலைபோட்டு யிரும்பினாலே
நருதியே நால்சாமம் வருத்தாயானால்
நாட்டமாம் செம்பருத்தப் பூப்போலாமே. 75

பூப்போல செந்தூரம் பொருமிப்போகும்
பேராக ஆறவிட்டு வாங்கிக்கொண்டு
தீப்போலா மனோசிலையும் நாலத்தொன்று
செயமான வெங்காரப் பொரிதான் கூட்டு
தூப்போலச் சூதமது நாலிலொன்று
சுத்தமாங் கத்தாழஞ் சாற்றிலாட்டு
மூப்போலே மூன்றுபுடம் போட்டெடுக்க
முதுமையாய் ரவிதனிலே நூற்றுக்கொன்றே. 76

நூற்றுக்கு ஒன்றான செந்தூரத்தை
நுகர்ந்துமே மண்டலந்தான் தேனிலுண்ண
பார்த்துக்கொண்டே பெண்ணைத் திரிந்திடாதே
பாழான மனதுதனைப் பரவொட்டாதே
கார்த்துக் கொண்டேயிருநீ வாசியோடே
கலந்துமே கேசரியில் கருத்தையுண்ணு
மாற்றுக்கொண் டேறிவிடுஞ் சடமுந்தானும்
மகத்தான சித்தியிது மருவிப்பாரே. 77

## சூரியகாந்தி விபரம்

பார்பருதி காந்தியென்ற பூவைவாங்கி
பண்பாக நிழலுலர்த்திச் சூரணமேசெய்து
நேராவின் பால்தனிலே வெருகடிதான்கொள்ளு
நிசமாக மண்டலந்தான் கொண்டாயானால்
கார்கருகி யிடியிற்குள் பயமோயில்லை
கலந்துநின்ற கேசரத்தி லாடலாகும்
வார்கருகிச் சட்டைகக்கி மதன்போலாகும்
மகத்தான அமுர்தமுண்ட மார்க்கந்தானே. 78

## அயச்செம்பு

மார்க்கமாய் அரப்பொடிதான் புதிதாய்வாங்கி
மகத்தான பழசாற்றி லூரவைத்து
கார்க்கமாங் களிம்பெல்லாங் கழுவிப்போட்டு
காரியமாய்ச் சூரியகாந் தியதன்பூவை

தீர்க்கமா யிடித்துமே பிழிந்துகொண்டு
சேந்தஅரப் பொடிதன்னை ஊரவைப்பாய்
ஆர்க்கமா யைந்துநா ளூறப்போட்டு
அதினோடே வெங்காரங் கூட்டக்கேளே. 79

## வெங்காரக் கட்டு

கூட்டவே வெங்காரப் பலகைகேளு
குறித்த உத்தாமணியின் சாறுவாங்கி
தாட்டவே பலகைதனில் தோய்த்துத்தோய்த்து
சமத்தான ரவிதனிலே போட்டுவைப்பாய்
பாட்டவே பத்துநாள் போட்டபின்பு
பாங்கான லிங்கமது சுருக்குப்போட
தூட்டவே சூரியகாந்தி யிலைச்சார்தன்னில்
சுருக்கிடவே நால்சாமங் கட்டிப்போமே. 80

கட்டியதோர் லிங்கமது பலந்தானொன்று
கல்லான காரமது பலந்தானொன்று
மட்டியதோர் பூச்சாற்றி லரைத்துமைபோல்
வளமாக மூன்றுபங்கு பண்ணிக்கொண்டு
ஒட்டியதோர் முன்வைத்த அரப்பொடிதானாலில்
உறுதியாய்ப் பிசைந்துவைத்து ஒருநாள் தானும்
தெட்டியதோர் குகையிலிட்டு சில்லுப்போட்டு
திரளவே சரவுலையி லுருக்கியாட்டே. 81

ஆட்டையிலே களிபோலே உருகும்பாரு
அடித்தரமே அயமெல்லாம் பொறுக்கிக்கொண்டு
மூட்டையிலே முன்மருந்து பிசரிவைத்து
முதிர்ந்துமே உருக்கினால் மணியுமாகும்
பூட்டையிலே பின்பொருக்கால் மருந்திட்டாட்டு
பேரான சூரியன்போல் ரவியுமாகும்
காட்டையிலே மதிதன்னில் பத்துக்கொன்று
கனகமது ஐந்தாகுங் கண்டுதீரே. 82

தீரவே செந்தூரஞ் செய்யக்கேளு
சிறப்பான அயச்செம்பு உருகும்போது

தாரவே தங்கமது நாலுக்கொன்று
        தாக்கியே உருக்கியபின் தகடுதட்டி
ஆரவே அதின்மேலே பூசக்கேளு
        அரிதாரஞ் சிலைகெந்தி சூதத்தோடு
வேரவே வீரமொடு அரைக்கால்வாசி
        மிகக்கூட்டி அயச்செம்புத் தகட்டிற்பூசி
மூரவே புடம்போட்டு பின்புதானும்
        முன்மருந்து பூசியே புடத்தைப்போடே. 83

புடம்போடக் கருப்பாக நொறுங்கிப்போகும்
        பொரிகாரம் பொரித்தெடுத்து நாலத்தொன்று
மடம்போட்ட மனோசிலையும் நாலத்தொன்று
        மாசற்ற சூதமது நாலத்தொன்று
கடம்போட்ட காந்திப்பூச் சாற்றரைத்து
        கசகாமல் சில்லிட்டுச் சீலைசெய்து
நடம்போட லெகுவாகப் புடத்தைப்போடு
        நவலோகம் நூற்றீய யேமமாமே. 84

## ஓரிலைத்தாமரை

ஏமமாம் ஓரிலைத்தா மரைசமூலம்
        இணைத்துமே சூரணித்து நெய்யிற்கொள்ள
சேமமா யுடம்பில்நின்ற வேகமெல்லாம்
        சிதைந்துமே போய்விடுஞ் சிறுநீர்தானும்
காமமாய்க் குளிர்ந்துவிடும் கண்புகைச்சல்
        காமாலை வறச்சியொடு கடியபித்தம்
வாமமாய்ப் போடுவிடுமண் டலந்தான்கொள்ளு
        மகத்தான ரோகமெல்லாம் மாறிப்போமே. 85

## விடத்தலைவேர்

மாறவே விடத்தேரின் வேர்ப்பட்டைவாங்கி
        மருவநன்றா யிடித்தரித்துச் சூரணமாக்கி
தாறவே பலம்நாலு நிறுத்துக்கொண்டு
        தளுக்கான சூதமது பலந்தானாலு

கூறவே குலாமல்லிச் சாற்றினாலே
குலாவியரைத் தென்சாமம் பொடியாய்ப்பண்ணி
தேறவே நாற்பதுநாள் தேனிற்கொள்ளு
சில்விசமாம் பதினெட்டுக் குட்டம்போமே. 86

## சீந்திலிப்புரம்

போமென்ற பொற்சீந்தி யானால்நன்று
புகழான சிகப்புநன்று கருப்புநன்று
நாமென்று கிடையாவிட்டால் நல்லசீந்தி
நறுக்கியே துண்டுதுண்டாய்க் கிழித்துப்போடு
ஏமென்று நிழலுலர்த்தி யிடித்துத்தூளாய்
ஏத்தமாய் வடிகட்டிச் சூரணமேசெய்து
தாமென்ற நாலிலொன்று சக்கரையைக்கூட்டி
சமத்தாக வெருகடிதூள் மண்டலந்தான்கொள்ளே. 87

கொள்ளவே குன்மமொடு சத்திவிக்கல்
கொடிதான அத்திசுரம் மெய்மறத்தல்
விள்ளவே வெகுமூத்தி ரக்கிரிச்சம்
மிக்கநீர்க் கடுப்போடு மேனிகன்னல்
தெள்ளவே சிரசிலுள்ள வாய்வெல்லாந்தான்
சிறந்துமே அமுர்தத்தால் நாடிசுத்தி
கள்ளப்பா காமப்பா லுடம்பிலூறும்
கணக்கான அமுர்தசஞ் சீவிதானே. 88

## வேம்பு

சஞ்சீவி யாகும்நூ றாண்டின்வேம்பின்
சதைப்பட்டை வெட்டிவந்து நிழலுலர்த்தி
துஞ்சீவி யிடித்துச் சூரணமேசெய்து
சுத்தமாங் கருங்குன்றிச் சாறுவாங்கி
பஞ்சீவி ஐந்துவகை பாவுகமேபண்ணி
பருதிமுன்னே பரப்பியே வடிகட்டிக்கொண்
டஞ்சீவி கற்கண்டு வாலிலொன்றுசேர்த்து
நலமாக மண்டலந்தான் தொண்டிடாயே. 89

கொண்டிட்டால் வயிரம்போ லிருகுந்தேகம்
குறிப்பான கண்ரெண்டுஞ் சிகப்புமாகும்
முண்டிட்டா லூழிவினைப் பயனும்போகும்
உகர்ந்தமாங் கற்பவரை இருக்குந்தேகம்
நின்றிட்டால் நரம்பதுவு முறுக்குமாகும்
நரைதிரையு மாறுமே ஞானமுண்டாம்
ஒன்றிட்டால் யோகத்தி லுறுதியாகும்
ஒருக்காலுஞ் சாவில்லை உண்மைதானே. 90

## கருவேம்பு

உண்மையாய் கருப்பாக வேம்புண்டாக்கி
உகந்துமே மண்டலந்தான் கொண்டாயாகில்
வெண்மையாஞ் சரீரமது கருவண்டுபோலாம்
மேனியினில் ரோமமெல்லாம் நிமிர்ந்தெழும்பும்
தன்மையாய்ச் சடந்தானுங் கற்பாந்தகாலம்
சமாதியிலே யிருக்கலாந் தழுக்காய்க்காணும்
ஒண்மையா யிருட்டறையி லிருந்தாயானால்
உதிக்கின்ற கதிர்போலே யிருக்கும்பாரே. 91

## சர்க்கரை வேம்பு

பாரென்ற மலைதோறுஞ் சர்க்கரைவேம்புண்டு
பட்டைதின்றால் கற்கண்டு போலேயாகும்
காரென்ற யிலைதின்றால் கரும்புபோலாம்
காய்தின்றால் மாம்பழத்தின் ரசனையாகும்
வேரென்றால் கஸ்தூரி வாசம்வீசும்
விரைதின்றால் மிக்கநெல்லிக் கனிபோலாகும்
தாரென்ற சமூலந்தான் சூரணமேசெய்து
தனியாவின் பால்தனிலே சமத்தாயுண்ணே. 92

உண்ணவே மண்டலத்தில் கெவுனசித்தி
யோகசித்தி லோகசித்தி உயர்ந்தசித்தி
விண்ணவே வேர்தன்னிற் சூதங்கட்டும்
மிக்கான இலைதன்னில் நாகங்கட்டும்

கண்ணவே காயதனில் செம்புநீறும்
கடியதொரு விரைத்தயிலம் தாதுகட்டும்
பண்ணவே பட்டைதனி லுப்புக்கட்டும்
பாங்கெல்லாம் யான்சொன்ன படியேபாரே. 93

படியான சர்க்கரையாம் வேம்பின்காயை
பக்குவமா யிளம்பிஞ்சு பருவம்பார்த்து
கடிதான திடித்துமே சாறுவாங்கி
காய்ச்சியே கொலுதன்னைத் தோய்த்திட்டாக்கால்
எடியான அயந்தானும் யேமமாகும்
ஏத்தமாம் பூச்சாற்றில் செம்பேயாகும்
நெடியான பழச்சாற்றில் காரீயம்யேமம்
நிச்சயமாய்ப் பார்த்தபடி யான்சொன்னேனே. 94

## பொற்றலைகையான்

சொன்னதொரு பொற்றலையின் சாறுவாங்கி
செம்புதனைத் தகடுதட்டிச் சாற்றில்தோய்ப்பா
பண்ணவே காய்ச்சியே பதினொருக்கால்
பருவமுடன் தோய்க்கவெல்லா மதராய்வீழும்
அன்னவே அதரெல்லா மரைத்துமைபோல்
அடைவான லேசான வில்லைதட்டி
பொன்னதோ ரண்டோடு பொடித்துமூடி
பொருந்தகலி லாயிரமா மெருவிற்போடே. 95

எருவிலே புடமிட்டு ஆறவிட்டு
யெடுத்தாக்கால் குருபற்ப மென்றுபேரு
அருவிலே அணுகினால் சூதங்கட்டும்
அணுகினால் மதிதனிலே யேமமாகும்
பொருவிலே பொற்றலையி னிலையரைத்து
பேரான பாக்களவு பணவிடைதான்பற்பம்
மருவிலே மண்டலந்தா னுண்டாயாகில்
மாணிக்க வொளிபோலே வடிவுமாமே. 96

## கிளிமூக்கு மரம்

வடிவான கிளிமூக்கு மரமதொன்று
மகாஉயர்த்தி யாயிருக்கு மகத்தான தூலம்

இடிவான யிலையதுவும் அரிசிபோலிருக்கும்
ஏத்தமாம் பூப்பூத்த மற்றநாள்பழமாம்
படிவான பழத்தையுண்டால் சாமத்தில்சித்தி
பண்பான கேசரத்தி லாடலாகும்
நெடிதான பழமரிது கிடைக்கவென்றால்
நேர்ந்தங்கே சமாதியுற்றால் நேருந்தானே. 97

கரிசாலை

நேர்ந்தபின்பு கரிசாலை குப்பைமேனி
நேர்சிறிய செருப்படியுங் கருப்பாய்ப்பண்ணி
ஏர்ந்தபின்பு யிடித்துநன்றாய் சூரணமே செய்து
ஏற்றதாந் தேன்தனில் கிண்டிவைத்து
கார்ந்தபின்பு அந்திசந்தி கழஞ்சிகொள்ளு
கண்காண மண்டடலந்தான் கொண்டாயானால்
தார்ந்தபின்பு தசையிலுள்ள தோஷம்போகும்
சகல நூல் கருவெல்லாந் தோணும்பாரே. 98

தோணுமே சுயம்பாட வாலைவாக்காம்
சுத்தமாய்ப் பொன்னிறம்போ லாகுந்தேகம்
காணுமே மன்மதன்போ லழகுண்டாகும்
கஞ்சமலர் போல்கண்கள் சிவப்புமாகும்
வேணுமே பெண்களது போகந்தானும்
விரைந்துநின்று மாயத்தில் சிக்கவேண்டாம்
தாணுமே துரும்பாகும் பெண்ணரவுகடித்தால்
சொல்லிவிட்டேன் சித்தியெலாம் விழலாய்ப்போமே. 99

விழலாகப் போகாமல் கரிசாலைகரந்தை
மிக்கான பொற்றலையும் நீலிவல்லாரை
பழலாகப் பாக்களவு பாலிற்கொள்ளு
பாங்கான மண்டலந்தா னுண்டாயானால்
கழலாகக் காயந்தான் ஆயிரத்தியெட்டு
கனகம்போல் சடலமது கனிந்துமின்னும்
மழலாக வார்த்தையது கின்னரத்தினொலியாம்
மகத்தான வாசியது யிருகும்பாரே. 100

### சிவனார் வேம்பு

இறுகுமே சிவனார்தன் வேம்பினோடு
ஏற்றமாய் வாலுழுவை சமனாய்க்கூட்டி
நறுகுமே யிடித்துநையப் பூப்படத்தில்தயிலம்
நலமாக வாங்கியே வைத்துக்கொண்டு
திறுகுமே சீரகமுஞ் சர்க்கரையும்போட்டு
திறமாகக் கலக்கியதில் வைத்துக்கொண்டு
தறுகுமே கால்கழஞ்சி அந்திசந்தி
தனமான மண்டலந்தான் கொண்டிடாயே. 101

கொண்டிட்டால் வாதபித்தங் கபத்தைச்சாடும்
கொடியான தாதுவெல்லாம் பருத்திருக்கும்
கண்டிட்டால் கோடைரவி காந்தியில்லை
காலுரக்கும் யெத்தூரம் நடந்திட்டாலும்
தண்டிட்ட சமாதிக்கு ளிருந்தாற்கேளு
சாங்கமா யுரைப்புண்டாந் தளர்ச்சியில்லை
விண்டிட்ட சரசோதி நிர்த்தஞ்செய்வாள்
வேதாந்தம் பார்த்து நித்தம் விரவிடாயே. 102

### வெள்ளைத் தூதுவளை

விரவுவெள்ளைத் தூதுவளை யிலையினோடு
விரிவான தக்கோலஞ் சாதிக்காயும்
வரவுவா லுழுவையென்ற விரையினோடு
மகத்தான கொடுவேலி வேரின்பட்டை
நிரவுநிலப் பனைக்கிழங்கு பொற்கொன்றைப்பூ
நேரான ஐங்கோல விரையினோடு
தரவுசம னாகவே பொடியாய்ப்பண்ணி
சமத்தாக வெருகடிதான் முள்பன்னிநெய்யில்
உரவுவொரு மண்டலந்தான் கொண்டாயானால்
உகாந்தவரை சடந்தானு மிருக்கும்பாரே. 103

பாரென்ற பராபரமா மூலநாயன்
பாட்டார்பதஞ் சிரசில்வைத்து வணக்கஞ்செய்து
தேரென்ற திருமூலர் ஐநூற்றுள்ளே
சொல்லிவைத்தார் சிக்காகத் தெளிவாய்த்தானும்

ஏரென்ற ஏழுஆ யிரத்தில்தானும்
எளிதாகச் சொல்லிவைத்தே னறியவென்று
காரென்ற காலாங்கி அய்யர்தின்ற
கற்பத்தை அடியேற்கு கருதினாரே. 104

கருதியதோர் சங்கத் தூதுவளைதன்னை
சமூலந்தான் பிடுங்கிவந்து சாறுவாங்கி
பருதியதோர் படிசாறு அளந்துகொண்டு
பாங்கான பூநீறு பலந்தான்போட்டு
அருதியதோர் அயக்கரண்டி தனைத்துலக்கி
ஆசில்லாச் சூதமது பலந்தான்விட்டு
சருதியதோர் சாறதனைச் சுருக்குப்போட
சமரசமாய்க் கட்டியே மணிபோலாமே. 105

மணிபோல நின்றதொரு சூதந்தானும்
வாட்டியே மத்தங்காய் தன்னிற்தானும்
துணிபோலே சூடனிட்ட தீயில்வாட்டி
சுயமான கரண்டிதனி லுருக்கிக்கொண்டு
கனிபோல தங்கமது நாலத்தொன்று
தங்கத்தி னிடைதானும் நாகம்போடு
வினிபோலே வெங்காரஞ் சிலையுங்கூட்டி
வெளுப்பான தூதுவளைச் சாற்றாலாட்டே. 106

ஆட்டியே வெகுபுடமா யைந்துபோடு
ஆண்மையாஞ் சூதமது குருவுமாகும்
மாட்டியே வெள்ளியதில் நூற்றுக்கொன்று
மருவிடவே மாத்தேழு காணுங்காணும்
பாட்டியே பாக்களவு யிலையரைத்து
பற்பமது பணவிடைதான் பாலிற்கொள்ள
நாட்டியே நாற்பதுநாள் கொண்டாயானால்
நலமான சூரியன்போல் முகமுமாமே. 107

## அமுரி முறிக்க

ஆமென்ற அமுரிதன்னை முறிக்கக்கேளு
அடிகனத்த தேத்தான்வேர் கொண்டுவந்து
பாமென்ற பாத்திரம்போல் கடைந்துவாங்கி
பக்குவமா யமுரிதனை முன்பின்தள்ளி

நாமென்ற பாத்திரத்தில் நடு அமுரிவிட்டு
நற்தேத்தாம் வித்தொன்று பொடித்துப்போட்டு
காமென்ற கால்நாழி வைத்துவைக்கக்
கசடதுவுஞ் சுத்தமாய் முறிந்துபோமே. 108

முறிந்துபோ மூத்திரத்தின் தோஷம்போகும்
முயற்சியாங் கற்பமெல்லா மிப்படியேகொள்ளு
தெரிந்துபோம் நூற்றாண்டின் வேப்பம் வேரில்
நுணுக்கமாய் பாத்திரந்தான் பண்ணிக்கொண்டு
வரிந்துபோங் காந்தமென்ற பாத்திரமாகும்
காணிந்தப் பாத்திரம்பால் நெய்தேனுக்காம்
வெரிந்துபோங் கற்பங்கள் தின்னும்போது
வெட்டைமேல் கொண்டாக்கால் விபரங்கேளே.109

கேளுநீ தேத்தாவேர் பாத்திரந்தான்
கிளர்ந்தெழுந்த அமுரிக்கு வைத்துக்கொண்டு
மாளுநீ வேம்பினுட பாத்திரந்தான்
மருந்தென்ற நெய்தேனுக் காகுமாகும்
காளுநீ காந்தமென்ற பாத்திரத்தில்
கற்பத்திற் குண்கின்ற ஊனுக்காகும்
தாளுநீ யிந்தமுறை தப்பாமல் நின்று
சத்தியமாய்க் கற்பத்தைத் தாக்கியுண்ணே. 110

## கற்பத்தால் ஏற்பட்ட சூடுக்குக் கஷாயம்

உண்ணவே கற்பத்தில் காந்தல் கொண்டால்
உயர்கின்ற மயக்கமொடு சோபதாபம்
முண்ணவே மூர்ச்சையொடு கரங்கள் கண்டால்
மூர்க்கமாய் கிஷாயமொன்று சொல்லக்கேளு
தண்ணவே தாளிசபத் திரியுஞ்சுக்குந்
தனியான மதுரமொடு சீரகந்தான்
துண்ணவே சிறுதேக்கு கற்கண்டோடே
சிறப்பாக வகைக்குக்கால் பலமேகூட்டே. 111

கூட்டியே நீர்விட்டு யெட்டிலொன்றாய்க்
குறுகவே காய்ச்சியே பாத்திரத்திலுண்ணு
மாட்டியே மயக்கமோடு தாபசோபம்
வருந்தமாஞ் சேர்துமமுஞ் சுரங்கள்மூர்ச்சை
ஏட்டியே காச்சலொடு எரிவுஅஸ்தி
யினிமையாம் வாய்த்துவர்ப்பு யெல்லாந்தீரும்
மாட்டியே பஞ்சகற்பந் தேய்த்துவைத்து
மருந்தென்ற நீர்தன்னில் முழுகிப்போடே. 112

## வெந்நீர் குளிக்க

முழுகவே பற்படாகம் நிழல்நாகல்தான்
முதிராத மருதிலையும் பழம்பாசிகூட்டு
நழுகவே செம்பரத்தை யிலையினோடு
நற்குளத்தி குளறியென்ற யிலையினோடு
உழுகவே ஓரிலைத்தா மரையின்வேரு
உத்துமே சமபாகந் தண்ணீரில் போட்டு
கழுகவே வெந்நீரில் முழுகிப்போடு
காந்தலெல்லாந் தீர்ந்துவிடுங் கற்பமுண்ணே. 113

## நீலஞ்சோதி

உண்ணவே நீலமாஞ் சோதிதானும்
உயர்கின்ற கெந்தகமுஞ் சரியாய்க்கூட்டி
துண்ணவே சூதமது கெந்தகத்தினிடைதான்
துடியான திப்பிலியும் ஏலங்கூட
அண்ணவே ஐந்தையுந்தான் சமபாகமாக்கி
அதட்டியரைக் கல்வத்தில் அவுரிச்சாற்றால்
கண்ணவே நால்சாம மறைக்கமையாம்
காயவைத்துக் கால்கழஞ்சி தேனிலுண்ணே. 114

உண்ணவே வாயுவென்ற தளத்தைச்சாடும்
ஓடுகின்ற வாசியெல்லா முள்ளேதாக்கும்

தண்ணவே சமாதிக்கு ளசைத்திடாது
சாங்கமாய்ப் பொறிகளெல்லாந் தன்மையாகும்
விண்ணவே கேசரத்தி லாடும்போது
மிக்கான மயக்கமொடு தாபமில்லை
அண்ணவே ரோமமெல்லாம் ஆண்டங்காக்காய்
அதினுடைய யிறகுக்கு அதிகங்காணே. 115

## பிரமி

அதிகமாம் பிரமியுட சாறுபடி யொன்று
ஆவிநெய் படியொன்று சமனாய்ச்சேர்த்து
நிதிகமா யடுப்பில்வைத்துக் காய்ச்சிக்கொண்டு
நேர்நாட்டுச் சர்க்கரைதான் நாலத்தொன்று
விதிகமா மிளகோடு திப்பிலியுந் துப்பு
மிக்கான சுக்கோடு நெல்லிதான்றி
பதிகமா மஞ்சளொடு சமனாய்ச்சேர்த்து
பாங்காக வகைக்கியொரு பலத்தான்கூட்டே. 116

பலமாக யிடித்துநன்றாய்ச் சூரணமேசெய்து
பாங்கான முன்நெய்யிற் கிளறிக்கொண்டு
குலமாக அடிதொடுத்துக் கற்பந்தின்று
கூர்ந்துமே மிள்குதின்னுங் காலந்தன்னில்
கலமாகக் கிஷாயமெல்லாம் ராமாறுகொள்ளு
கடிசான செந்தூரம் காலையிலெதின்றால்
மலமாக நெல்லிக்காய்ப் பிரமாணந்தான்
மாலையிலே யிம்மருந்தைக் கொண்டிடாயே. 117

கொண்டிடவே பதினாறு வயதுமாகும்
குறிப்பாய்ப்பெண் கொண்டாக்கால் கெற்பம்நாடு
அண்டிடவே அடுக்காறு முறுவிக்காணும்
அந்தரத்தில் மீனெல்லாம் பகலிற்காணும்
விண்டிடவே வெள்ளெழுத்து மாறிப்போகும்
மேல்கொண்ட வாசியெல்லா மீண்டுபுக்கும்
கண்டிடவே காமப்பா லுடம்பிலூறும்
கடிதான செந்தூர வேகம்போமே. 118

## கல்பிரமி

வேகம்போங் கல்லுக்குள் பிரமிதன்னை
விரைந்திடித்துப் பூரணமாய்ச் செய்துகொண்டு
தாகம்போம் தேன்தன்னில் குழைத்துண்டாக்கால்
சடந்தானுங் கருங்கல்லாய்த் தளுக்குமாகும்
காகம்போங் கத்தியால் வீசினாக்கால்
கலீரென்று வெங்கலத்தின் ஓசைகாணும்
மாகம்போம் அந்திசந்தி மண்டலந்தான் கொள்ளு
மலையிலுள்ளோ ரெல்லாருங் கொண்டிட்டாரே. 119

கொண்டிட்ட கல்பிரமிச் சாறுவாங்கி
குகையரைத்து யிலைதன்னைச் சூதம்விட்டு
ஒண்டிட்ட ஓட்டில்வைத்துச் சுருக்குப்போட
ஒருசாமந் தனில்தானும் உண்டையாகும்
பண்டிட்ட தங்கமிட்டு நாகமிட்டு
பரிவாகக் குகையிலிட்டு உருக்கிக்கொண்டு
கண்டிட்ட கல்வத்தில் பொடியாய்ப்பண்ணி
கனமான சிலைகெந்தி காரங்கூட்டே. 120

கூட்டியே கல்பிரமிச் சாற்றாலாட்டி
குறிப்பாக காசியென்ற மேருக்கேற்றி
ஆட்டியே பனிரெண்டு சாமந்தீயை
ஆறவிட்டு யெடுத்தாக்கால் அருணன்போலாம்
நாட்டியே நவலோகம் ஆயிரத்துக்கோடும்
நயந்துமே பணவிடைதான் பாலிலுண்ணு
மாட்டியே மண்டலந்தா னுண்டாயானால்
மாசற்ற வயிரம்போல் தேகமாமே. 121

## நெல்லி

வயிரமாம் நெல்லிமுள்ளி தன்னைவாங்கி
மருவநன்றா யிடித்துமே சூரணமாக்கி
அயிரமாம் அப்பிரேகச் செந்தூரந்தான்
அதற்கெட்டுப் பங்குக்கு ஒன்றுசேர்த்து

துயிரமாந் தேன்தன்னில் குழைந்துஉண்ணு
சுகமாக மண்டலந்தா னுண்டாயானால்
கயிரமாங் காயமது கருங்காலிக்கட்டை
கனல்போலே சோதியாய்க் காணுங்காணே. 122

காணவே நெல்லிப்பூ தன்னைவாங்கி
கண்காண நிழலுலர்த்திச் சூரணமாக்கி
பாணவே பால்தன்னிற் குழைத்துக்கொண்டு
பாங்காக மண்டலந்தா னுண்டாயானால்
தோணவே தீயேரிப்புச் சலக்கழிச்சல்
தூய்தான யிரணங்கள் சோகைபாண்டு
ஊணவே லோகபற்பம் வைத்தேயுண்ணு
ஓடலாம் வெகுதூர மூச்சாடாதே. 123

ஆடாத நெல்லிவேர்ப் பட்டைவாங்கி
அதையிரவி தனிலுலர்த்திப் பானைக்கிட்டு
மேடாத மேல்மூடி சீலைசெய்து
மிக்கஅடித் தூர்தன்னில் துருவும்போட்டு
பூடாத பூப்புடத்தில் தயிலம்வாங்கி
பேரான அயப்பொடிசுத் தித்துக்கொண்டு
மாடாத தயிலத்திற் பிசறிவைத்து
மனோசிலையும் வெங்காரம் யெட்டுக்கொன்றே. 124

எட்டுக்கு ஒன்றுதான் கல்வத்திட்டி
யிழுத்தரைத்து மூன்றுபங்கு பண்ணிக்கொண்டு
உட்டுக்கு ஒருபங்கு அரப்பொடியிற்சேர்த்து
உருக்குநீ குகையிலிட்டுச் சரஉலையிற்தானும்
நட்டுக்கு உருகிநன்றாய் மணியுமாகும்
நறுக்கியே உடைத்திட்டு முன்மருந்துகூட்டி
முட்டுக்கு மூன்றுருக்கு உருக்கிப்பாரு
முதிர்ந்து அயம் ரவியாகயிருக்கும்பாரே. 125

இருக்கின்ற அயச்செம்பில் யெட்டுக்கொன்று
ஏத்தமாம் தங்கத்தை உருகையிலேயீவாய்
நருக்கின்ற நாகத்தை தங்கயிடைபோட்டு
நலமாக உருக்கியே தகடுவார்த்து

மருக்கின்ற மனோசிலையும் லிங்கங்காரம்
        மாழவே யெட்டொன்று தயிலத்தாட்டி
தருக்கின்ற தகட்டின்மேல் பூசிப்பூசி
        சார்வாக அகலிலிட்டுப் புடத்தைப்போடே. 126

போடவே நொறுங்கியது தூளுமாகும்
        பேரான மதிதன்னில் நூற்றுக்கொன்று
மாடவே மாத்துயே மூரையேகாணும்
        மகத்தான புடசெயந்தான் மாட்டிப்பாரு
பாடவே பணவிடைதான் தயிலத் துண்ணு
        பண்பான சடந்தானுஞ் செம்புநிறமாகும்
காடவே மதிக்காப்பு கையிலிட்டால்
        கற்பத்தின் வேகமதால் யேமமாமே. 127

## கருநெல்லி

ஏமமாங் கரநெல்லி மலைதோருமுண்டு
        எளிதாகக் கிடையாட்டால் கருப்புப்பண்ணி
நாமமாம் நாற்பதுநாள் பாலிற்கொள்ளு
        நமன்வந்து நாடாமல் நடுங்கிப்போவான்
தாமமாஞ் சட்டையெல்லாங் கக்கிப்போடும்
        தங்கம்போல் மேனியுமாய் தளுக்காய்க்காணும்
ஆடவே கருநெல்லிப் போக்குச் சொல்ல
        அரன்காணார் யான்தானுங் கண்டிலேனே. 128

## கற்பூரவில்வம்

கண்டிலேன் கற்பூர வில்வந்தானும்
        கடிந்ததைத்துப் பாக்களவு பாலிலுண்ணு
அண்டில்லா அக்கினியைத் தானவிக்கும்
        அழுந்துகின்ற மேகமெல்லாஞ் சாடிப்போகும்
மண்டிலேன் வாதபித் தத்தைநீக்கும்
        வாய் நீர்தான் மிகஊரல் வற்றிப்போகும்
வெண்டில்லா மேணிசர சரப்புபோகும்
        மிக்கான வெள்ளெளுத்து மீறிடாதே. 129

மீறிடாப் பூப்பறித்து யிடித்துச்சாறு
மிகப்பிழிந்து கலசத்தில் வைத்துக்கொண்டு
நாறிடாக் கெந்தகத்தைக் கரண்டிதனிலுருக்கி
நறுநெய்யாம் பன்றியுட நெய்தான்குத்தி
தாறிடாச் சாறதனில் முப்பத்தொன்று
சாய்க்கவே கெந்தகந்தான் கட்டிப்போகும்
பாறிடாப் பன்றிநெய் விட்டரைத்து
பாங்காக நால்சாமம் பண்பாய்வாங்கே. 130

வாங்கியே காசியென்ற மேருவிலேபோட்டு
வளமாகக் குப்பிக்கிக் கதம்பைவைத்து
தாங்கியே சட்டிதனில் பொத்தலிட்டு
சாங்கமாய்க் குப்பிநுனி தலைகீழாய்நிற்க
ஆங்கியே அடுப்பேற்றி அடுப்புக்குள்கிண்ணி
அகலமாய் வைத்துமே சட்டியில்தீப்போடு
தேங்கியே கிண்ணிக்குள் தயிலம்வீழும்
சிறப்பான மதித்தகட்டில் தேய்த்திடாயே. 131

தேய்த்துமே புடம்போட்டு ஆறிப்பார்த்தால்
சிவந்தெழுந்து பத்தரையாம் யேமந்தானும்
சாய்த்துமே தயிலத்தை பணவிடைதானெடுத்து
சர்க்கரையிற் கொண்டிடவே தாதுவிர்த்தி
மாய்த்துமே மனந்தன்னை மாயந்தன்னில்
மருவாமல் மதியென்ற மண்டத்திற்புக்கு
தோய்த்துமே அமுர்தன்தான் தாரையாகும்
சோமப்பால் தனையுண்ணச் சோதியாமே. 132

சோதியாய் நூறாண்டின் மரத்தைப்பார்த்துத்
சோதித்து வயிரமுண்டு வெட்டிவந்து
மேதியாய் மெல்லியதாய்த் தூளாய்ப்பண்ணி
மிகக்கொழுந் திலைச்சாற்றால் அரைத்துமைபோல்
பாதியாய்க் குகைபோலே பண்ணிக்கொண்டு
பருவமுடன் சுத்தித்த சூதம்வார்த்து

ஆதியா யகவில்வைத்து மேலகலுமூடி
அசையாதே பத்தெருவிற் புடந்தான்போடே. 133

போடவே சூதமது யேமமாகும்
பிரித்துயிதை விற்றாக்கால் பிரமைகொள்வார்
ஆடவே கம்பிபண்ணிக் குளிகைகோர்த்து
அடையாள மாய்மார்பு தன்னில்போடு
மாடவே மாற்றென்ற ஐம்பத்தொன்று
மாத்திரைக்கோல் தனக்குத்தான் வளையம்போடு
காடவே குண்டலங்கள் வளையல்பண்ணு
கண்கொள்ளாச் சோதியது காணலாமே. 134

## வில்வப்பழம்

காணலா மென்றவில்வப் பழத்தைத்தேடி
கனமாகப் பொறுக்கியே சதையைவாங்கி
வேணலாம் வெயிலில்வைத்து உலர்த்திக்கொண்டு
மிக்கான பூப்புடத்தில் தயிலம்வாங்கி
ஆணலாம் சூதத்தை அயத்தில்வைத்து
அதீதமாய்ச் சுருக்கிடவே கட்டிப்போகும்
தோணலா முன்போல் செந்தூரம்பண்ணி
சுத்தமாந் தயிலத்தில் குழைத்துஉண்ணே. 135

உண்ணவே மண்டலத்தில் நரையேமாறும்
உகாந்தமெல்லாஞ் சடந்தானுமுகந் துகாணும்
பண்ணவே தயிலத்தில் நாகஞ்சாய்க்கப்
பாங்கான புகைஐந்துங் கட்டிப்போகும்
அண்ணவே அயமுருகி யீயமாகும்
அறுபத்து நாலான பாஷாணந்தான்
தண்ணவே சாமத்தில் கட்டிப்போகும்
தனித்ததோர் உபரசங்கள் சத்துமாமே. 136

## ஐவணை

சத்தாக ஐவணைப்பூ தன்னைவாங்கி
சமரசமாய்ச் சாறிடித்துப் பிழிந்துகொண்டு

பத்தாகச் சாதிலிங்கஞ் சுருக்குப்போட
பாங்காகப் புகைகட்டி மணியுமாகும்
அத்தாக யிடைரெண்டு அரப்பொடியைச் சேர்த்து
அதிகமாம் வெங்காரஞ் சிலையுங்கூட்டி
நத்தாக நாலிலொன்று சேர்த்துக்கொண்டு
நமனாகும் பூச்சாற்றில் அரைத்திடாயே. 137

அரைத்திட்டு ஐந்துதர முருக்கிப்போடு
அதிகமாம் நாகம்போல் சத்துமாகும்
பரைத்திட்ட நாகத்தை நாலுக்கொன்று
பாங்காகக் கொடுத்திட்டால் உள்ளேகொள்ளும்
நரைத்திட்டு தங்கமிட்டுச் சூதமிட்டு
தனியான சிலைகாரங் கெந்திகூட்டி
திரைத்திட்ட செந்தூரம் பண்ணிக்கொண்டு
சிறந்தநவ லோகத்தில் ஆயிரத்துக்கொன்றே. 138

ஒன்றான செந்தூரம் பணவிடைதான்தேனில்
உத்துமே மண்டலந்தான் கொண்டாயானால்
குன்றான மலைபோலக் கைகளாகும்
குத்தினால் தவிடுபொடி கூழாங்கற்கள்
வென்றான சடமாகும் வாசிதானும்
விடுக்காமல் கும்பிக்கும் சாமந்தானும்
பன்றான பருதிக்கு ளோடும்போது
பாங்கான ரவிகாந்தி பனிபோலாமே. 139

## மருதோன்றி

பனிப்போலா மருதோன்றி யிலையிடித்துப்
பாங்கான கிட்டிகட்டிச் சாறுவாங்கி
தனிப்போலாம் எருமையுட சாணந்தன்னை
சாங்கமாய்க் கிட்டிகட்டிச் சாறுவாங்கி
இனிப்போலா மிரண்டுபடி ஒன்றாகக்கலக்கி
ஏத்தமாய் வெடியுப்பு பலமும்நாலு
தினிப்போலாஞ் சீனமது பலமும்நாலு
சிந்தாத கல்லுப்பு பலமும்நாலே. 140

நாலாகப் பொடிபண்ணிச் சாறதனில்கலக்கி
நலத்ததோர் காரீயம் பலந்தானெட்டு

ஆலாக அயக்கரண்டி தனிலுருக்கி
அதுக்குள்ளே சாய்த்திடுவாய் சாறுவற்றுமட்டும்
போலாகப் புரட்டியே அகலிலிட்டு
பெரும்புடமாய்ப் போட்டுக்கல் வத்திற்கொட்டி
மாலாக மருதோன்றி யிலைச்சாற்றாலரைத்து
மாளுமட்டு மூன்றுபுடம் போட்டிடாயே. 141

போட்டெடுக்க மாதளம்பூ நிறமாகும்
பேரான கற்கண்டில் பணவிடைதான்கொள்ளு
ஆட்டெடுத்த அருணநிறம் போலாமேனி
ஆயிரத்துக் கொன்றிடவே அதிகமாத்தாம்
நீட்டெடுத்த மேனியுமோ லேசாய்க்காணும்
நிலையான வாசியெல்லா முள்ளேயாகும்
காட்டெடுத்த கைசிவந்து அறிவுபோச்சு
கனகத்தைக் கண்டாலுங் கரியாய்ப்போமே. 142

## பலாசு

போகாமல் பலாசுனுட கற்பங்கேளு
புகழ்ந்தவேர்ப் பட்டையிலே காய்பூவோடு
நோகாம நிழலுலர்த்தா யுலர்த்திடித்து
நேரிசையாய் வடிகட்டிச் சூரணமேசெய்து
வேகாமல் வெள்ளாட்டுப் பாலிற்கொள்ளு
விரைந்துமே மண்டலந்தான் கொண்டாயானால்
சாகாம லிருக்கலாஞ் சதுர்முகவன்படைப்பு
தகர்ந்துபோம் சமாதியினி லிருந்திடாயே. 143

## வெண்புரசு

இருந்திட்ட வெண்புரசுப் பூவைவாங்கி
யிதமாகப் படிசாறு பிழிந்துகொண்டு
தருந்திட்ட தாளாகமும் பலந்தான்நாலு
தாக்கான கற்சுண்ண நீறிற்போட்டு
துருந்திட்டு மூன்றுநா ளூரலவைத்து
சுப்பிரமாய்க் கழுவியே சுருக்குப்போடு

பொருந்திட்ட பூவரைத்துக் கவசங்கட்டி
புரகுபட்டைச் சாம்பல்வைத்து அவுழ்த்திடாயே. 144

அமுத்தியே தீயெரிப்பாய் நாலுசாமம்
ஆறவிட்டுப் பார்த்தாக்கால் சங்குபோலாம்
பமுத்தியே பணவிடைதான் பாலிற்கொள்ளு
பருதியதி னொளிவாரு மேனிதானும்
நமுத்தியே நாற்பதுநாள் கொண்டாயானால்
நாதாக்கள் சாபமது நாடிடாது
தமுத்தியே சர்ப்பங்கள் கடித்திட்டாக்கால்
தனக்குத்தான் கேடென்று நாடிச்சாமே. 145

நாடியே நவலோகத் தீய்ந்தாயானால்
நாட்டமாய்ப் பதினைந்து மாற்றுமாகும்
தூடியே துருசியின்மேல் பொட்டுப்போட்டால்
சுக்கான்போல் பொருமியே நீறுமாகும்
நீடியே யிந்நீறு லிங்கமேலே
லேபித்தால் முழுக்கட்டாம் வீரத்துக்கு
மாடியே லேபித்துப் புடத்தைப்போட
மணிபோலே நின்றுமே உருகும்பாரே. 146

## பொற்கொன்றை

பாரென்ற பொற்கொன்றைப் பூச்சாறுவாங்கி
பாங்கான மனோசிலைக்குச் சுருக்குப்போடு
நாரென்று நால்சாமஞ் சுருக்குப்போட
நலமான பவளம்போ லிருகிக்கட்டும்
நேரென்ற காரீய முருகும் போது
நினைவாகக் காரத்தோ டீய்ந்தாயானால்
தேரென்று நொறுங்கியே தூளாய்ப்போகும்
நேர்ந்திதுக்கு நாலிலொன்று தங்கம்போடே. 147

தங்கத்தி னிடைபோடு லிங்கத்தன்னை
தங்கயிடை சுத்தித்த கெந்தகந்தான்
அங்கத்தின் கத்தாழஞ் சாற்றிலாட்டி
அகலிலிட்டுப் புடம்போடக் களங்கமாகும்

பங்கத்தின் ரவிமதியி லிருபதுக்கொன்றீய
பாங்கான மாத்தேழு பரிந்துகாணும்
வங்கத்தின் வேலையென்றால் புடசெயந்தான்
மறவாதே மண்டலந்தான் பானத்துண்ணே. 148

உண்ணயிலே லகிரியது உள்ளேமீறி
உற்றாறு தலங்களெல்லா முருவாய்த்தோற்றும்
வண்ணவே வாசிசற்றும் நழுவிடாது
மறவாதே பகலிரவு வாசிமாட்டு
துண்ணவே காமமென்ற பேயைத்தள்ளு
சுகானந்தத் தனுபோகத் தன்னுநேசம்
கண்ணவே சொல்முறைகள் கருவைப்பாரு
கலந்தோடித் திரிந்தாக்கால் கசடனாச்சே. 149

## மந்தாரை

ஆச்சென்ற வெள்ளைமந் தாரைப்பூவை
அமுத்தியே யிடித்துத்தான் சாறுவாங்கி
வேச்சென்ற வெள்ளைப்பா ஷாணத்துக்கு
மிடுக்காக னால்சாமம் கருக்குப்போடு
பூச்சென்ற பூவரைத்துக் கவசங்கட்டி
புளிப்பறணிச் சாம்பலுக்குள் பொருந்தவைத்து
நாச்சென்ற நால்சாமம் கமலத்தீயால்
நாட்டியே யெரியிட்டு நலமாய்வாங்கே. 150

நலமாக வாங்கியே ரவியிலீய
நல்மாற்று தசமாற்று ஆனவெள்ளி
பெலமான ஈயத்துக் கசைந்திடாது
பேணிப்பார் லெகுவான வித்தையாகும்
வலமாக மந்தாரை வெள்ளைப்பூவை
வாங்கியே நிழலுலர்த்தி யிடித்துத்தூளாய்
குலமாக வெருகடிதூள் தேனிற்கொள்ளக்
குஷ்டமது பதினெட்டும் ஓடிப்போமே. 151

## வெள்ளை நீர்முள்ளி

ஓடியே வெள்ளை நீர்முள்ளி தன்னை
உற்றயிலை தானரைத்துப் பாக்களவுபாலில்

மாடியே மண்டலந்தான் கொண்டாயானால்
மாசற்ற மதிபோலே முகமுமாகும்
தேடியே காமத்தில் சிதையவேண்டாம்
சிவயோக மார்க்கத்தில் சிந்தையுன்னு
காடியே பெண்மாய்கை தன்னில்கண்ட
காரணத்தை நினைவுன்னிக் கருத்தாய்ப்பாரே. 152

கருவான நீர்முள்ளிச் சாறுவாங்கி
கரண்டிதனில் ரசம்விடடுச் சுருக்குப்போட
நெருவான நீர்வற்றிக் கட்டிப்போகும்
நிலவரமாய்ச் சூடனுட தீயில்வாட்டு
உருவான குகைதன்னி லுருக்கிக்கொண்டு
உகந்துமே நாலிலொன்று தங்கங்கூட்டு
தருவான தங்கமிடை நாகம்போட்டு
தகர்த்துமே கல்வத்தில் பொடியாய்ப்பண்ணே. 153

பொடியான மருந்துக்குப் பாதிகெந்தி
பொடித்துமே ஓடதனி லுருக்கிக்கொண்டு
தடியான தயிலத்தில் பொடியைப்போட்டு
சமர்த்தாக வறுத்திடுவாய் சூரியாலே
கடியான கரிபோலே தூளுமாகும்
கலரிதுக்குள் மனோசிலையுங் காரந்தானும்
பிடியான பொடிபண்ணி மேருக்கேற்றி
பெரிதான வாலுகையி லெரித்திடாயே. 154

யெரித்திட்ட செந்தூரம் பவளம்போலாம்
மிதமான வெள்ளைநீர் முள்ளிதன்னை
அரித்திட்ட யிலையரைத்துப் பாக்களவுதானும்
பாலிலே மிகக்கரைத்துப் பருகினாக்கால்
நரித்திட்ட நரையெல்லா மாறிப்போகும்
நாதாந்தப் பெருவெளியில் நாட்டங்கூடும்
உரித்திட்ட ஒன்பதிலும் நூற்றுக்கோடும்
உயர்ந்திட்ட மாற்றாகு முண்மைதானே. 155

உண்மையாய்ச் செம்பெடுத்துத் தகடுதட்டி
உற்றநீர் முள்ளியிலைச் சாற்றில்தோய்ப்பாய்

பண்மையாய்ப் பதினொருக்கால் தோய்த்தாயானால்
பட்டைவிட்டுச் செம்பெல்லாம் நொறுங்கிப்போகும்
கண்மையாய்க் கல்வத்தி லரைத்துக்கட்டி
காசுபோல் வில்லைபண்ணிக் காயப்போடு
விண்மையாய் மூன்றுதர முலர்த்திச் சாறு
விட்டரைத்து ரவிதனிலே காயப்போடே. 156

காய்ந்தபின்பு யிலையரைத்துக் கவசங்கட்டி
கனக்கவே புடம்போடக் கடியநீறாம்
தாய்ந்தபின்பு யிடைக்கிடைதான் சூதஞ்சேர்த்து
தாக்கான வாய்நீரால் மித்தித்தேதான்
வேய்ந்தபின்பு வெய்யலில்வை கடிகைதானும்
வெண்ணீறாய்ப் பொருமியே விரிந்துபோகும்
நாய்ந்தபின்பு விசமிடை பாலிலுண்ணு
நாற்பதுநாள் மறவாம லுண்டிடாயே. 157

மறவாமல் மதிதன்னி லீய்ந்தாயானால்
மாசற்ற தங்கமுமாம் ஆயிரத்துக்கோடும்
பறவாமல் சூதத்தைக் கவ்விக்கொல்லும்
பாஷாண மென்றதெல்லாம் படுதீப்பற்றும்
துறவாமல் வாழையென்ற பழத்தைவாங்கி
துரும்பாலே தொட்டந்தப் பழங்கீறிவைக்க
அறவாமல் சாமந்தான் கழித்துப்பார்க்க
அழுந்தாது பச்சைக்கா யாகும்போரே. 158

பாரென்ற காய்தன்னைத் தோலைச்சீவி
பக்குவமாய்ச் சமைததுண்ணு அன்னத்தோடே
காரென்ற காயந்தான் தளர்ந்ததெல்லாம்
கதித்திறுகிப் பதினாறு பிராயமாவாய்
கூரென்ற அண்டரண்ட கடாகங்கள்பார்த்து
கொடிதான சாரணைதான் தீர்த்துக்கொண்டு
ஆரென்ற அண்டரண்ட கடாகங்கள்பார்த்து
ஆராய்ந்து அடுக்குச்சோ திக்குங்காணே. 159

## மூலிகை உற்பத்தி விபரம்

காணவே சிகப்புச்சித் திரமூலந்தான்
கடுஅருணன் ரதந்தன்னை ஊரும்போது
வேணவே வேருவைதான் நிலத்திற்சிந்தி
மிக்ககடு மூலிகைதான் நாலுசாதி
ஆணவே சிகப்பு அயா மார்க்கத்தோடு
அனலான வெள்ளெறுக்கு ரெத்தக்கள்ளி
ஊணவே யிதுநாலு முற்பத்தியாச்சு
உறுதிகடு மூலிகைதா னுசத்திதானே. 160

## சிகப்பு சித்ரமூலம்

உசத்தியாஞ் சிவப்புச்சித் திரமூலந்தான்
உறுகிடித்துப் பஞ்சாக்கி வைத்துக்கொண்டு
கசத்தியாங் காரீயஞ் சட்டியிலேபோட்டுக்
கலரிதுக்குள் பதினாறுக் கொன்றிணங்கன்
தசத்தியாஞ் சட்டியிலே உருக்கிக்கொண்டு
தாக்கிடுவாய் வெடியுப்பு முன்னேதானும்
குசத்தயாம் ஆதண்டக் கழியினாலே
குத்தியே கடைந்திடுவாய் குறிப்பாய்த்தானே. 161

தானென்ற சிகப்புசித்ர மூலந்தன்னை
தயங்காதே போட்டுமேல் கழியால்கிண்டு
தானென்ற யிப்படிதான் நாலுசாமம்
நலமாக ஆதண்டங் கழியால்மத்தி
தேனென்ற செந்தூரம் ரவிதான்தோற்கும்
சிறப்பாகக் கைமுறையாய்ச் செய்துபாரு
ஆனென்ற செந்தூர மாயிரத்துக்கோடும்
ஆயியுட நெற்றிதனில் பொட்டுமாச்சே. 162

ஆச்சுதே மண்டலந்தான் வீசமிடைதூக்கி
ஆவிநெய் தேனிலுண்ண ஆண்மைமெத்த
ஏச்சுதே யிடிவிழுந்தால் சடத்தின்மேலே
எழும்பியே பந்துபோல் அப்பால்வீழும்

கோரென்று வாசியுட குறிப்புங்காட்டிக்
குளிகையுட விதங்காட்டி வாதங்கட்டி
தீடீரென்று காயசித்தி சிறப்புங்காட்டிச்
செயலான மனோன்மணியின் விலாசங்காட்டி
காரென்று சதாநித்தம் கேசரியைத்தானும்
கைநெல்லிக் கனிபோலே காண்பித்தாரே. 339

காண்பித்த குருவான காலாங்கிநாதர்
கடாட்சத்தா லடியேனுங் கருத்துஉன்னி
ஏண்பித்த யெழுகாண்டம் வாதஞானம்
ஏற்றமாங் காயசித்தி யோகசித்தி
கூண்பெற்ற குளிகைசித்தி கெவுனசித்தி
கூறாத மந்திரந்தான் சித்தியெல்லாம்
நூண்பித்த நூலினுட நுட்பமெல்லாம்
நுன்னிமையாய் கருமறைப்பு சொல்லிட்டேனே. 340

சொல்லிவிட்டேன் காயசித்தி செய்யுமார்க்கம்
சோதித்து அடிதொடுத்து நுனிமட்டுக்கும்
சொல்லிவிட்டேன் யோகத்தின் பயிற்சியெல்லாம்
சுருதியா மனுபோகஞ் செய்தநேர்மை
சொல்லிவிட்டேன் சிந்திக்க வழலைவாங்கி
செயமான செந்தூரம் பண்ணுநேர்மை
சொல்லிவிட்டேன் காயசித்தி முந்நூறுஞ் சொச்சம்
திருபாடல் பாடினேன் சென்னிதானே. 341

தானான கற்பமது முந்நூறுஞ்சொச்சம்
தாய்சொன்ன படியுண்டு சாதித்தேனான்
கோனான காலாங்கி நாதர்சொன்ன
குறிப்பெல்லாஞ் சோதித்துக்கொண்ட மார்க்கம்
தேனான சிவயோக முனிவர்தானும்
சிறுபாட்டர் சொன்னபடி சித்தியானேன்
பானான பராபரமாந் திருமூலநாயர்
பாட்டர்சொன்ன படிதின்று முடித்திட்டேனே. 342

போகர் கற்பம் முற்றிற்று.

இதர வெளியீடுகள்

சித்தர்களின் கற்பசூத்திரம்

அகத்தியர் பூரண சூத்திரம் - 216

அகத்தியர் குருநாடி சாத்திரம் 235

நந்தீசர் நிகண்டு 300

திருவள்ளுவ நாயனார் கற்பம்

யாகோபு பஞ்சமித்திரம் - 300

எளிய வீட்டு வைத்தியக் கைமுறைகள்

அகத்தியர் பரிபாசை 300 (மூலமும் உரையும்)

சித்தர்களின் பிரணவ சூத்திரம்-முப்பு-1

அகத்தியர் பன்னிரு காண்டம்-200

சித்தர் மூலிகை விஷ வைத்தியம்